# ஒவ்வொரு மங்கையின் வெற்றிக்குப்பின்னால்

# ஒரு நிரந்தர சக்தி!

# சக்தி காஸ்.




ஒவ்வொரு மங்கைக்கும் தான் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் வெற்றிகரமானதாக இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பு இயல்பானது. அதற்கு நேசக்கரம் நீட்டுகிறது ஒரு நிரந்தர சக்தி. அது தான் **சக்தி காஸ்**

இந்தியாவின் மிகப்பெரிய தனியார் துறை L.P.G. நிறுவனம் **சக்தி காஸ்.** இலட்சக்கணக்கான குடும்பங்களில், எல்லா நேரங்களிலும் உறுதுணையாக நின்று இல்லத்தரசிகளை **அன்னபூரணிகளாக** விளங்கச்செய்வது **சக்தி காஸ்**

உங்களுடைய இல்லத்தில் **சக்தி காஸ்** இருக்கிறது என்றால் உங்களிடம் எப்போதும் **நிரந்தர சக்தி** இருக்கிறது.




**தக்ஷின் சக்தி**

- உடனடி இணைப்பு
- உடனடி ரீஃபில்
- அரசாங்க காஸ் விலைக்கு சமமாக ஆயுள் முழுவதும் ரீஃபில்கள் கொடுக்கப்படும்.
- இவை அனைத்தும் உங்களுக்கு ரூ. 4,900/-க்கு மட்டுமே.

- அரசாங்க காஸ் விலைக்கு ஆயுள் முழுவதும் ரீஃபில்.
- தக்ஷின் சக்தி திட்டத்தில் மட்டுமே.

**ஜனதா சக்தி**

சக்தி காஸ் இணைப்பை ரூ. 1,350/- க்குப் பெற ஒரு அரிய வாய்ப்பு.

## ஸ்ரீ சக்தி எல்.பி.ஜி லிமிடெட்

SHAKTI GAS

மண்டல அலுவலகம் : 5/18, தேக் அபார்ட்மெண்ட்ஸ், 1வது மெயின் ரோடு, கஸ்தூர்பாய் நகர், அடையார், சென்னை - 20. போன் : 4420970 போன்/ஃபேக்ஸ் : 4430678

தலைமை அலுவலகம் : வீனஸ் பிளாசா, ஹைதராபாத் - 16.
போன் : 869416/17/18/19. Fax : 040 814411.

ரீஜனல் ஆஃபீஸ் : 142, II மெயின், Ist ப்ளாக், RMV II ஸ்டேஜ், டாலர்ஸ் காலனி, பெங்களூர் - 94. போன்/ஃபேக்ஸ் : 080 3414490,3414491

PERCEPT/H

**இந்தியாவின் மிகப்பெரிய தனியார் எல்.பி.ஜி. நிறுவனம்**







# வண்ணங்களால் சவால்விடும் சிறுமி!

குளோரியாவுக்கு ஆறு வயதுதான் ஆகிறது. ஆனால் அவள் வரையும் வண்ண ஓவியங்களைப் பார்க்கிறவர்கள், பிரமிப்பார்கள். முறையாகப் பல வருடங்கள் ஓவியம் வரையக் கற்றவர்களுக்கே கைவரும் வண்ணக் கலவைகள் அவள் ஓவியங்களில் அமைந்திருக்கின்றன.

''மியூசிக்கில்தான் அவளுக்கு ஆர்வம் இருக்கும் என்று யமஹா கீபோர்டு வாங்கிக் கொடுத்தேன். ஆனால் அவள் அதைத் தொடவே இல்லை. ஸ்கெட்ச் பென்னும், வாட்டர் கலரும்தான் வேண்டும் என்றாள். வாங்கிக் கொடுத்தேன்!'' என்றார் குளோரியாவின் அப்பா டேவிட்.

சில பெயிண்டிங்குகளை இரண்டு நாள் வரைந்துவிட்டு, சரியாக வரவில்லை என்று தூக்கிப் போட்டு விடுவாளாம்; பேசாமல்

போய்ப் படுக்கையில் படுத்து விடுவானாம். நன்றாக வந்து விட்டால் இரவு பன்னிரண்டு மணி வரை வரைந்து, திருத்தங்கள் செய்து அழகுபடுத்திவிட்டு, ஒரு மணிக்குப் படுக்கப் போவானாம்!

"டி.வி பார்ப்பதா? தானும் பார்க்க மாட்டாள். பிறரும் பார்க்கக் கூடாது!... அம்மா செல்லம் ஜாஸ்தி!" என்றார் டேவிட்.

ஒரிஜினல் பெயின்டிங்குகளைப் பார்க்கையில், இத்தனை சிறிய பெண் வரைந்திருப்பாளா என்று எவரும் நினைக்கக் கூடும். ஆனால், 'அப்படியே ஆறு வயதுப் பெண் வரைந்திருந்தாலும் அதில் என்ன பெரிய ஆச்சரியம் வேண்டியிருக்கிறது?' என்று கேட்பவர்கள், குளோரியாவைப் பற்றி முழுதும் அறிந்தால், அப்படி ஒரு கேள்வியை எழுப்ப மாட்டார்கள்!



**"உங்க வகுப்புல படிச்ச அந்த அரசியல் வாதியின் மகள் என்னன்னு கடிதம் போட்டு இருக்காள்?"**

**"அவன் பரீட்சைல தோல்வி அடைஞ்சதுக்கு தார்மிகப் பொறுப்பு ஏற்று, நான் ஆசிரியர் பதவியை உடனே ராஜினாமா செய்யணுமாம்!"**

**— வி.சி. கிருஷ்ணரத்தினம்**

குளோரியாவின் ஒரு வேளைச் சாப்பாடு அரை இட்லியும் துளியூண்டு 'பூஸ்ட்'டும்தான். எதையும் கரைத்து, ஸ்பூனில்தான் உட்கொள்ள முடியும், திரவமாக. எழுந்து நடக்க முடியாது. காலைத் தரையில் வைத்தாலே உடல் நடுங்கும்.

முழங்கைகளில் எழும் கொப்புளங்கள் காரணமாக பயங்கர வலி.

உடல் முழுதும் வெடித்து எழுந்திருக்கும் கொப்புளங்கள் காரணமாகத் தோலில் மென்மையே இல்லாமல் போய், சருமம் அங்கங்கே உதிர்கிறது.

"எபிடெர்மோசிஸ் புல்லோஸா' என்று இந்த நோய்க்குப் பெயர். அதாவது, மேல் தோலின் கொப்புளங்கள் ஜெனடிக் பிராப்ளம், பிறவியிலேயே வந்து விட்டது. இதற்கு மருந்து கிடையாது என்கிறார்கள். ஆனால் சரும நோய் நிபுணர்கள் டாக்டர் தம்பையா, டாக்டர் பேட்ரிக் ஜேசுவடியான் முதல், சித்த மருத்துவம், ஹோமியோ மருத்துவம் வரை எல்லாம் பார்த்து விட்டோம். கடந்த இரண்டு வருடங்களாகத் தமிழகத்தில் உள்ள அத்தனை பிரபல வைத்தியர்களையும் பார்த்தாயிற்று. இப்போது பிரார்த்தனைதான்!" என்றார் டேவிட்.

"ஐஸ்க்ரீம், வாழைப்பழம், திராட்சை என்று எப்போதாவது துளித்துளி சாப்பிடுவாள். என்றாலும் அவள் வயதுக் குழந்தைகள் சாப்பிடும் உணவில் பத்தில் ஒரு பங்கு கூட அவளால் உண்ண முடிவதில்லை! காரம் சுத்தமாகக் கிடையாது!"

பள்ளிக்கூடம் போகாவிட்டாலும், தமிழும், ஆங்கிலமும் வீட்டிலேயே சொல்லிக் கொடுப்பதால், பேச முடிகிறது.

வாஷிங்டனில் உள்ள, இதுபோன்ற நோயாளிகளின் அமைப்பு ஒன்று, இவர்கள் நோயை ஒன்று முதல் 9 வரை கிரேடு செய்திருக்கிறதாம். முதல் கிரேடில் இருப்பவர்கள் இந்த அளவு சிரமப்படுவதில்லை. குளோரியா 5-வது கிரேடு.

"இன்டர்நெட் மூலமாக உலகம் முழுதும் தொடர்பு கொண்டு உதவி பெறக்கூடிய வாய்ப்பு இப்போது இருக்கிறது. ஆனால் குளோரியாவுக்கு இதுவரை எந்தப் பயனும் கிடைக்கவில்லை... சில சமயம் கண்களின் இமை மூடிப் போய்விடும். அதைப் பிரிக்கவே ரொம்ப சிரமப்படுவாள்!" என்றார் டேவிட். "ஆனால், வண்ணங்கள் ஏனோ அவளைக் கவர்ந்திருக்கின்றன. இப்போது பெரிய பெயின்டிங்குகளை ட்ரை பண்ண ஆசை இருக்கிறது. இயற்கை என்னதான் குரூரமாயிருந்தாலும் வண்ணங்களைக் கொண்டு அதற்கு சவால் விடுகிறாள் குளோரியா!"

டேவிட் ஒரு காமிராமேன். சூடாமணி, சு. சமுத்திரம் முதலியவர்கள் எழுதிய கதைகளைச் சங்கமம் என்று டி.வி. தொடர்கள் எடுத்திருக்கிறார். 'பேசு மனமே பேசு' தொடரும் இவர் எடுத்ததுதான். 'நான் உன்னை விரும்பும்போது' தொடரில் இப்போது ஈடுபட்டிருக்கிறார்.

மகள் குளோரியாவின் பெயின்டிங் எக்சிபிஷன் ஒன்று வைக்க நினைத்திருக்கிறார் டேவிட். ●

**— சித்தார்த்**



# என்ன பேசிக் கொண்டார்கள்...?

**'பாரத ரத்னா' வழங்கும் விழாவின் போது விஞ்ஞானி அப்துல் கலாம், இசையரசி எம். எஸ். சுப்புலட்சுமியுடன் உரையாடிக் கொண்டிருந்த போது, 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' நாளிதழ் எடுத்துப் பிரசுரித்த படம் இது. என்ன பேசினார்கள் இருவரும்? எம். எஸ். அவர்களிடமே கேட்டோம் :**

**அப்துல் கலாம் :** நான் கனவிலும் கற்பனை செய்யாத பாக்கியம் இது. இப்படி உங்கள் அருகில் அமர்ந்து இந்தக் கௌரவத்தை அடைவது.... சிறு வயதிலிருந்தே உங்கள் இசையைக் கேட்டு லயித்துப் போயிருக்கிறேன். இவ்வளவு எளிமையாய் இருக்கிறீர்களே?

**எம்.எஸ்:** உங்களுக்குச் சங்கீதம் தெரியுமா...?

**அப்துல் கலாம் :** கொஞ்சம் தெரியும். வீணை வாசிப்பதுண்டு... இப்போது எந்தரோ மகானுபாவுலு (தியாகராஜரின் பஞ்சரத்ன கீர்த்தனை) கற்று வருகிறேன். சுச்சிதமானதும் உங்கள் முன்வந்து வாசித்துக் காட்ட வேண்டும்.

**எம்.எஸ்:** அவசியம் வாருங்கள்....

உண்மைத் தகவல் : **அம்மு**

**பாலிவுட்டில் மாதுரியை 'பொம்பளை அமிதாப்' என்று அழைக்கின்றனர்! '88 முதல் '98 வரையிலான பாலிவுட் காலகட்டத்தை 'Madhuri Era' என்றே சொல்கின்றனர். கடந்த ஆண்டுகளில் வெளிவந்த இவரது படங்கள் இவருக்கு 'ஊர்வசி' பட்டத்தைத் தரும் என்று சத்தியம் செய்பவர்களும் பாலிவுட்டில் இருக்கிறார்கள்! மும்பையில் 'வாஜூத்' படப்பிடிப்பிலிருந்த மாதுரியை நாம் சந்தித்து உரையாடினோம்....**

இந்திப் படவுலகின் நெம்பர் ஒன்னாக இருக்கிற நீங்கள் இப்போது 'என்ஜினியர்' என்கிற தமிழ்ப்படத்திலும் நடிக்கிறீர்கள். எப்படி வந்தீர்கள்? அவசியம்தான் என்ன?"

"நல்ல கதை. இயக்குனர் சாந்தி கிருஷ்ணாவின் திறமை பற்றியும் எனக்கு நன்றாகவே தெரியும். கூடவே ஏ.ஆர். ரஹ்மான் இசை. எனக்கு முன்பே பழக்கமான அரவிந்தசாமிதான் ஹீரோ. இவற்றின் காரணமாகவே நான் தமிழில் நடிக்க ஒப்புக் கொண்டேன். இது தவறா என்ன?" என்று கண்களில் ஆச்சரியம் காட்டிக் கேட்டவரிடம் நாம் அடுத்த கேள்விக்குச் சென்றோம்.

"அதில்லை... பொதுவாகப் பார்த்தால் இந்தியில் மார்க்கெட் இல்லாதவர்களும் தாராளமாகக் கவர்ச்சி காட்டத் தயாராய் இருப்பவர்களும் தான் தமிழுக்கு வருகிறார்கள். நீங்கள் அப்படியில்லையே! இந்தியில் முன்னணியில் இருக்கிறீர்கள். பெரும்பாலும் கவர்ச்சியை விட நடிப்புக்கே முக்கியத்துவம் தருகிறீர்கள். இதன் காரணமாகவே இந்தக் கேள்வி..."

"என்ஜினியர் படத்தின் டான்ஸ் மாஸ்டர் ராஜூ சுந்தரம் எனக்கு நல்ல பழக்கம். அவர் மூலமும் அரவிந்தசாமி மூலமும் கதையைக் கேட்டேன். அதில் நடிப்பதற்கு நல்ல வாய்ப்பு உள்ளதால்தான் ஒப்புக் கொண்டேன்."

"ஆக, நீங்கள் நடிப்புக்குத்தான் முக்கியத்துவம் கொடுப்பீர்கள். கவர்ச்சிக்கு அல்ல. இது சரிதானா?"

"சாடிலைட் சானல்களோடு சினிமா போட்டி போட வேண்டியிருக்கிற இன்றைய சூழ்நிலையில் கவர்ச்சியும் படத்திற்கு அவசியம்தான். மானுக்குப் புள்ளி அவசியமா? மயிலுக்குத் தோகை அவசியமா? குயிலின் குரலுக்கு இனிமை அவசியமா? இவையெல்லாம் அவசியம்தான் என்றால் சினிமாவுக்கும் கவர்ச்சி அவசியம்தான். ஆனாலும் பார்க்கிறவர்கள் ரசிக்கிற மாதிரி கவர்ச்சி இருக்க வேண்டுமே தவிர, கண்களை மூடிக் கொள்கிற அளவுக்கு அது ஆபாசமாகி விடக்கூடாது. இதுதான் என் கருத்து."

"இங்கு ஒரு கேள்வி. மாதுரியின் கவர்ச்சியைக் கண்டுதான் உலகப் புகழ் பெற்ற ஓவியரான எம்.எப். ஹுசேன் மயங்கினாரா? இல்லை, மாதுரியின் நடிப்பைக் கண்டு மயங்கினாரா?"

"Sorry. ஹுசேனிடம் கேட்க வேண்டிய கேள்வியை என்னிடம் வந்து கேட்கிறீர்களே! இருந்தாலும் சொல்கிறேன்... என் நடிப்புடன் கூடிய கவர்ச்சியில் அவர் மயங்கியிருக்கலாம் அல்லவா!"

"உங்களின் இன்றைய முன்னணி நிலைக்கு யார் காரணம் என்று சொல்வீர்கள்?"

"முக்கியமாக ரசிகர்கள். அவர்களின் ஆதரவும் பத்திரிகையாளர்களின் தயவும் இல்லாமல் நான் இந்த நிலைக்கு வந்திருக்கவே முடியாது. அப்புறம் எனக்கு வாய்ப்புத் தந்த இயக்குனர்கள், நடன இயக்குனர்கள் என்று சொல்லிக் கொண்டே போகலாம்."

"இப்போது நடித்துக் கொண்டிருக்கும் இந்த வாஜூத் படம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"இதுவும் எனக்கொரு திருப்புமுனையாக இருக்கும் என்று நம்புகிறேன். காரணம், இதில் நான் நானாபடேகருடன் சேர்ந்து நடிக்கிறேன். ஒவ்வொரு காட்சியையும் பார்த்துப் பார்த்து எடுக்கிறார்கள். அப்புறம் புக்கார் படமும் பேசப்படக்கூடியதாக அமையும் என்றே நம்புகிறேன்.

"தமிழில் வேறு படம் ஏதும் நடிக்கிற எண்ணம் இருக்கிறதா?"

"நிச்சயமாக மணிரத்னம் படத்தில் நடிக்க வேண்டும் என்கிற ஆசை இருக்கிறது. சங்கர் தமது அடுத்த படத்துக்குக் கால்ஷீட் கேட்டிருக்கிறார். நேரமும் எனது கால்ஷீட்டுகளும் ஒத்து வரும் பட்சத்தில் அவசியம் இவர்கள் இருவர் படங்களிலும் நடிப்பேன்."

"அரசியலுக்கு வருகிற எண்ணம் இருக்கிறதா?" என்று நாம் கடைசியில் கேட்டபோது, "ஐயோ சாமி! வேண்டவே வேண்டாம்!" என்று இருகைகளையும் தலைக்கு மேல் உயர்த்திக் கும்பிட்டபடி நமக்கு விடை கொடுத்தார் மாதுரி. ●

சந்திப்பு : **நீலா**

# ஏன் கடவுளுக்கு நைவேத்தியம்காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.

- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து இஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.

- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது.* ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹமைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

---

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20. போன்: 4915662, 4914213

## காதில் விழுந்தவை:



# பஸ் கட்டணம் குறைகிறதா?

"என்ன ஸார், சென்னையிலும் கோவையிலும் போலீஸ் அதிகாரிகள் மாற்றப் படுவார்கள் என்று காதில் விழுந்ததை எழுதினீர்கள். நடந்தது. அது சரி; 'அமைச்சரவை மாற்றம் என்ன ஆயிற்று' என்று நமது தலைமைச் செயலக நண்பர் ஒருவர் கிண்டலாகக் கேட்டார். கொஞ்சம் நழுவிப் பார்த்தோம். இவ்வளவு மோசமான தோல்வி வரும் என்று கலைஞர் எதிர்பார்க்கவில்லை என்பதுதான் உண்மை. ஆட்சிக் கலைப்புப் பேச்சுக்கள் அடிபடத் துவங்கி விட்ட நிலையில், ஆறேழு அமைச்சர்களை நீக்கி விட்டுப் புதிய ஆட்களைப் போடுவதன் விளைவாக மாவட்டங்களில் புதிய அதிருப்தியாளர்கள் வரும் சூழ்நிலையை கலைஞர் விரும்பவில்லை என்கிறார்கள். – அதுவும் சட்டமன்றத் தேர்தல் வந்து விடுமோ என்ற நிலையில்! ஆனாலும் அமைச்சர்கள் மாற்றத்தை முற்றிலும் கலைஞர் கைவிட்டதாகத் தெரியவில்லை. மாறன் தில்லியில் பிஸியாக இருப்பதால்தான் தாமதம் என்கிறார்கள். இதற்கிடையில் அமைச்சர்கள் 'திக்... திக்குடன் ' பட்ஜெட் தொடரை சந்திக்கத் தயாராகி வருகிறார்கள்.

டாக்டர் ராமதாஸ் வழக்கமாக தேனாம்பேட்டை ஸ்ரீலேகா ஹோட்டலில்தான் தங்குவார். இந்தப் பாராளுமன்றத் தேர்தலுக்குப் பின்பு அவரைப் பார்க்க வருபவர்களில் கொஞ்சம் வித்தியாசம். அவரது இனத்தைச் சார்ந்த, இதுவரை டாக்டருக்கே அறிமுகம் இல்லாத தொழிலதிபர்களும், வியாபாரப் பிரமுகர்களும் அவரைப் பார்க்கக் கூட்டமாக வருகிறார்கள். இதற்கிடையில் பிரிந்து போன தீரன் 'மனம் திருந்திய மைந்தனாக' திரும்பி வர தூது விட்டிருக்கிறாராம்.

உ.பி. சகோதரி மற்றும் தினகரன், பாஸ்கரன் மீது போடப்பட்டுள்ள அந்நியச் செலாவணி மோசடி வழக்குகளைக் கிடப்பில் போடுவதற்கான ஏற்பாடுகளை அதிகாரிகள் மற்றும் அமைச்சர்களோடு தொடர்பு கொண்டு ராஜ்ய சபா உறுப்பினர் ஆர்.கே. குமார் கவனிக்க வேண்டுமாம். இது அம்மாவின் உத்தரவாம். சென்னையிலுள்ள அமலாக்கப் பிரிவு அதிகாரிகள் மீது சகோதரி கூட்டம் மிகக் கோபமாக இருக்கிறதாம்!

பா.ஜ.க அமைச்சரவையில் மூத்த தலைவரும், தமிழகத்தைச் சேர்ந்தவருமான ஜனா. கிருஷ்ணமூர்த்திக்கு இடம் கிடைக்குமா? "தேர்தலில் அவர் தோற்றாலும் தமிழகத்தைப் பொறுத்தவரை கட்சிக்கு மிகவும் முக்கியமானவர். தேர்தலின்போது கட்சியில் சேர்ந்து வென்ற ரங்கராஜனுக்கு அமைச்சர் பதவி கொடுக்கப்படும் நிலையில் ஜனாஜிக்கு கொடுக்காமல் வாஜ்பாய் இருக்க மாட்டார். பாராளுமன்றத்தில் நம்பிக்கை வோட்டு பெற்ற பின்பு நடக்கும் விஸ்தரிப்பில் ஜனாஜிக்கு இடம் கிடைக்கும்" என்று சொல்கிறார் பா.ஜ.க. பிரமுகர் ஒருவர். தமிழகத்தைப் பொறுத்தவரை முக்கியத்துவம் பெற்ற கட்சி ஆகி விட்டதால் தலைமை அலுவலகத்தை இப்போது இருக்கும் ஒதுக்குப் புறத்திலிருந்து நகரின் மத்தியில் மாற்ற இருக்கிறார்களாம்.

இந்த வருட தமிழக அரசின் பட்ஜெட் எப்படி இருக்கும்? "பஸ் கட்டண உயர்வு, ரேஷன் கார்டு போன்றவைகளும் ஒரு பிரச்னையாகப் பாராளுமன்றத் தேர்தலில் பேசப்பட்டதால், முற்றிலும் மக்களைக் கவர்வதாக பட்ஜெட் இருக்கும் என்று சொல்கிறார்கள். ஏற்றிய பஸ் கட்டண உயர்வு மீண்டும் பழைய நிலைக்கே குறைக்கப் பட்டாலும் ஆச்சர்யமில்லையாம். சட்டமன்றத் தேர்தல் வந்தால் இப்படிப்பட்ட நடவடிக்கை மிகவும் ஆதாயமாக இருக்கும் என்று சொல்லப்படுகிறதாம். அதே சமயம் அந்தத் தேர்தலில் தோற்றாலும், அடுத்து வரும் ஆட்சிக்கு (அது யாராக இருந்தாலும்) பஸ் கட்டணத்தை ஏற்றுவதைத் தவிர வேறு வழியில்லையாம்! சபாஷ், அப்படிப் போடு! இதற்கிடையில் சட்டமன்றத் தொடரின்போது சபையில் அமளியை உண்டாக்கும் பொறுப்பு, பாமக உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறதாம்.

- திலீப்பா

# ரோஜாவின் புதிய 'கொள்கை' முடிவு!

**வி**ஜயகுமாரின் வாரிசு ப்ரீதா விஜயகுமாரும் – சிவகுமாரின் வாரிசு சூர்யாவும் இணையும் படம் 'சந்திப்போமா.' இவர்கள் இணைந்து நடிக்கும் முதல் படத்தின் அனுபவமே ஒரு இக்கட்டான அனுபவமாக இருக்கும் என்று எதிர் பார்த்திருக்க மாட்டார்கள். அவுட்டோர் படப்பிடிப்பு முடிந்து புறப்பட வேண்டிய அன்று இருவராலும் ஹோட்டல் அறையை விட்டு ஒரு அடி கூட எடுத்து வைக்க முடியவில்லை. காரணம் – ஹோட்டல் பில் செட்டில் பண்ண, தயாரிப்பாளரிடம் நயா பைசா இல்லை! ப்ரீதாவும், சூர்யாவும் அழாத குறைதான். சூர்யா, அப்பா சிவகுமாருக்கு போன் பண்ணி விஷயத்தைச் சொல்ல – தம் சொந்தக் காசைக் கொண்டு போய் ஹோட்டல் பில் செட்டில் பண்ணி விட்டு சூர்யாவையும் ப்ரீதாவையும் மீட்டுக் கொண்டு வந்திருக்கிறார். சென்னைக்கு வந்ததும் மலேஷியக்காரரான அந்தப் படத் தயாரிப்பாளரை உண்டு இல்லை என்றாக்கி விட்டார் சிவகுமார்.



• ரோஜா

**பி**லிம் சிட்டியில் 'மனசுக்குள் வரலாமா' படப்பிடிப்பில் இருந்தார் அப்பாஸ். 'காதல் தேசத்'திற்குப் பின் 'வி.ஐ.பி.'யில் காணாமல் போனவர், நம்மைக் கண்டதும் நிறையப் பேசினார். இதுவரை நடிக்க வந்த வாய்ப்புகளை இழந்ததைப் பற்றி விலாவாரியாகச் சொன்னார். இந்தியில் மூன்று, தெலுங்கில் இரண்டு, தமிழில் இரண்டு என்று ஒரு நீண்ட பட்டியலே போட்டவர், அதற்கான காரணத்தையும் சொன்னார். இதுநாள் வரை தமக்கு மானேஜராயிருந்தவருக்கும் தமக்கும் இருந்த 'கம்யூனிகேஷன் கேப்'தான் வாய்ப்புகள் போனதற்குக் காரணம் என்றார். இன்னொரு விஷயம். புது மனைவிக்கு எந்தத் தொந்தரவும் தரக் கூடாது என்று வாரத்திற்கொருமுறை தாமே ஸ்பென்சர் பிளாஸாவிற்குச் சென்று காய்கறிகள் வாங்கி வந்து விடுகிறாராம் அப்பாஸ்! ஆனால், அவ்வப்போது சிம்ரனையும் சந்திக்கத் தவறுவதில்லை. கேட்டால், ''என்னுடைய நெருங்கிய தோழி சிம்ரன். அவரை அடிக்கடி சந்திப்பதில் என்ன தவறு?'' என்று எதிர்க்கேள்வி கேட்கிறார். ஹூம்!

**ரோ**ஜா நடிக்க வந்து எத்தனை வருடங்கள் ஆயிற்று? இதுவரை கார்த்திக்கோடு ஜோடி சேர்ந்து ரோஜா நடித்ததே இல்லை! அதைப் பொய்யாக்க இந்த வருடம் 'உன்னிடத்தில் என்னைக் கொடுத்தேன்' படத்தின் மூலம் கார்த்திக்கோடு இணைகிறார். ரம்பா, சிம்ரன், நக்மா அலையில் கரை ஒதுங்கியவர் போல் ரோஜா இருந்தாலும் வீட்டில் உட்கார்ந்து

• ப்ரீதா



சும்மா பொழுதைக் கழிக்க வில்லை. பெங்களூரில் ரியல் எஸ்டேட் பிஸினஸ் செய்து சம்பாதித்துக் கொண்டு தானிருக்கிறார். "இனி கவர்ச்சிக்கு நோ சான்ஸ். நல்ல கேரக்டர்களுக்கு மட்டும் நான் ரெடி" என்கிறார் ரோஜா. ரியல் எஸ்டேட் பிஸினஸ் செழிக்க வாழ்த்துக்கள்!

'தேவதை'யாய் வந்தவர் இப்படி ரோதனை பண்ணுவார் என்று நினைத்துக் கூடப் பார்த்திருக்க முடியாது. முதல் கலாட்டா பார்த்திபனோடு ஜோடி சேர்ந்த 'கல்யாண சுந்தரம்' படப்பிடிப்பில். அத்தோடு அந்தப் படத்திலிருந்து கீர்த்தி ரெட்டி விலகிக் கொண்டார். இரண்டாவது கலாட்டா சரத் குமாரோடு ஜோடி சேரும் 'நட்புக்காக' படப்பிடிப்பை பாதித்திருக்கிறது. பெங்களூர்வாசியான அவருக்கு இங்கே 'புக்' செய்த ஹோட்டல் அறை பிடிக்க வில்லையாம். அவர் ஏசிய ஏச்சுகள் தாங்காமல் போதுமடா சாமி என்று பெங் களூருக்கே திருப்பி அனுப்பி விட்டார்கள். மூன்றாவது கலாட்டா மம்முட்டியோடு ஜோடி சேரும் 'எதிரும் புதிரும்' படப்பிடிப்பில். இங்கும் ஹோட்டல் அறை அதிருப்தி பிரச்னை. இத்தனைக்கும் கீர்த்தி மேலும் ஹோட்டல் களில்தான் அறையெடுத் திருக்கிறார்கள்... பயனில்லை! இவர் களும் பெங்களூருக்கே பேக் அப் பண்ணி அனுப்பி விட்டார்கள்.

• கீர்த்திரெட்டி



தேவதையின் இந்த ரோதனைக்கு என்ன காரணம் என்று கேட்டால், "கோடீஸ் வரன் வீட்டுப் பொண்ணு அது. அதனால்தான்" என்கிற பதில்தான் வருகிறது. "கோடீஸ்வரன் வீட்டுப் பொண்ணு ஏன் நடிக்க வரணும்" என்கிறது கோடம்பாக்கம். இவ்வளவு இருந்தும் கீர்த்தி ரெட்டியின் வசம் இரண்டு படங்கள். ஒன்று 'ஜாலி'. இன்னொன்று 'இனியவளே'. ●

– மஹேந்த்

## கோவை தொலைத் தொடர்பு அலுவலகத்தில் தீ....

# எரிந்தது என்னென்ன..?

பொறுப்புமிக்க அலுவலர்கள் சிலர் 'ஒன்றும் எரிய வில்லை' என்றுதான் நம்மிடம் சொன்னார்கள். 'இனி எரிவ தற்கு ஒன்றுமில்லை' என்பதைத்தான் நாம் அந்த எரிந்த கட்டடத்தைச் சுற்றி வந்தபோது, உணர முடிந்தது. ஏராள மாகச் சிதறிக் கிடந்த ஃபைல்கள்; லெட்ஜர்கள், வாடிக் கையாளர்கள் பணம் கட்டின ரசீதுகள் என்று சாம்பலாகிப் போன நிலையில் நிறைய.. பாதி கருகியும் கருகாமலும் கொஞ்சம்... புகைந்து கொண்டிருந்த கட்டடத்தினுள்ளே கருகி உருகிக் கிடந்த ஸ்டீல் அலமாரிகள், டேபிள், சேர்கள், உருத் தெரியாமல் போன கம்ப்யூட்டர்கள்... இதுதான் நாம் கண்ட காட்சி.

'கட்டடம் எந்த நேரத்திலும் இடிந்து விழலாம். உள்ளே செல்லவோ அருகில் செல்லவோ அனுமதி யில்லை' என்கிற எழுத்து வடிவிலான அறிவிப்புகள் அலுவலக முகப்பில் ஆரம்பித்து உள்ளே பல இடங்களில்!

கோவை – திருச்சி ரோட்டில் அகில இந்திய வானொலி அருகில் வாடகைக் கட்டடத்தில் (சுமார் ஒரு ஏக்கர் பரப் பளவு) இயங்கி வரும் இந்த தொலைத் தொடர்பு அலுவல கம், பட்டப் பகலில் தீப்பிடித்த போது, ஏதோ விஷமிகளின் சதி அல்லது வெடிகுண்டு வெடிப்புப் பின்னணி என்றுதான் பலரும் நினைத்திருக்கிறார்கள். கோவையில் தேர்தல் நாளும் அதுவுமாய் நடந்த இத் தீ விபத்து மின்சாரக் கசிவு காரணமாக ஏற்பட்டது என்று நிர்வாகம் கூறுவதைப் பலரும் நம்ப மறுக்கின்றனர்.

இது சம்பந்தமாக, இவ்வலுவலகத்தில் இடிபாடுகளுக்குக் காவலிருந்த அலுவலர்களையே வினவியபோது, 'அதெல் லாம் எதுவும் இல்லை' 'பத்திரிகைகள் திரிக்கின்றன...!' என் றெல்லாம் அச்ச உணர்வோடு பதில்கள்.

ஜி.எம்மிடம் போனால், அவர் கூடாது என மக்கள் தொடர்பு அதிகாரியைத் தொடர்பு கொள்ளச் சொன்னார். அங்கே போனால் ஜி.எம்.தான் சொல்ல வேண்டும் என்கிற பதில்கள்... இருந்தாலும் இது சம்பந்தமாய் சில அலு வலர்களுக்கு நம்பிக்கையூட்டி, தனியே அழைத்து உண்மை நிலையைக் கேட்ட போது கிடைத்த தகவல்கள் :

● அலுவலர்களின் கோப்புகள் (ஊழியர்களின் சர்வீஸ் பைல்களும் அடக்கம்) அதிகமாய் எரிந்து போனது என்பது உண்மை. இதில் வாடிக்கையாளர்கள் கோப்புகள் எதுவும் இல்லை. அவை இருக்கும் இடம் இந்த அலுவலகமே அல்ல. அவை கோவை ஒப்பணக்கார வீதியில் உள்ள அலுவல கத்திலேதான் உள்ளது. அதுவும் இதுமாதிரியான வாடகைக் கட்டடம்தான். அக்கட்டடத்திலும் எந்தப் பாதுகாப்பும் இல்லை. துணிக்கடை, வாட்ச் கடை, பேன்ஸி ஸ்டோர் என நீளும்

• கட்டடத்தின் உள்ளே...



அந்த காம்ப்ளக்ஸுக்கு மொத்தமாய் ஒரேயொரு தனியார் (செக்யூரிட்டி ஆபீஸ் மூலமாய்) வாட்ச் மேன்தான்.

● மொத்தம் 3,500 ஊழி யர்களின் ஃபைல்களில் (கோவை, பல்லடம், உடுமலை, மேட்டுப் பாளையம், பொள்ளாச்சி என பணிபுரியும் அலு வலர்கள்) எத்தனை அழிந்து போயிருக்கும் என்பது சரிவரத் தெரிய வில்லை. என்றாலும் அது



* எரிந்த கட்டடம் வெளியே...

தூரத்தில் தீயணைப்பு நிலையம்) தீயணைத் திருக்கும். அரை மணி நேரம் தாமதம் கூட சந்தேகத்திற்கிடமளிக்கிறது. அப்படியும் வந்த வண்டியில் நீர் இல்லையாம். பக்கத்தில் கிணறு இருந்தும் அதிலிருந்து நீர் இறைக்க மோட்டார் பம்ப் (ஃபயர் சர்வீஸிடம்) கொண்டு வரவில்லையென்கிறார்கள். பிறகு ஏழெட்டு ஃபயர் சர்வீஸ் வண்டிகள் வந்தன என்றாலும் அவை ரொம்பவும் லேட்டாகவே வந்தன.

- கடந்த காலங்களில் டெலிபோன் இலாகா விலேயே செக்யூரிட்டி வைத்திருந்தார்கள். போது மான பாதுகாப்பு உணர்வும், அலுவலக ஆட்களை இனங்கண்டு கொள்ளும் திறனும் அவர்களுக்கு இருந்தது. ஆனால் இப்போது செக்யூரிட்டி வேலைக்கு டிபார்ட்மெண்ட் ஆட்களைத் துடைத்து எடுத்து விட்டு, தனியார் செக்யூரிட்டி சர்வீஸ் மூலமாக ஒப்பந்த அடிப்படையில் வருகிறார்கள்; போகிறார்கள். அவர்களுக்கு வருவது யார், போவது யார் என்பதில் ஒரு தெளிவு இருப்பதில்லை. அவர்களுக்கு அதில் அக்கறையும் இல்லை எனத் தெரிகிறது. ஒரு முக்கியமான மத்திய அரசு அலுவலகத்தின் பாதுகாப்புப் பணிக்கு இப் படியா ஆட்களை ஈடுபடுத்துவார்கள்...? இந்த நிர்வாக அசிரத்தை கூட இத் தீ விபத்துக்கு ஒரு காரணமாய் இருக்கும் என்பது சிலரது கருத்து.

மிக அதிக மாயிருக்கும் என்பது ஊர்ஜிதம். 20-25 கம்ப் யூட்டர்கள் எரிந்திருக் கக்கூடும். இந்த தீ விபத்து மின்சாரக் கசிவு (விடு முறை நாள்: சனிக்கிழமை, ஓரிரு ஊழியர்களை வைத்து ஒட்டடை அடித் துச் சுத்தம் செய்து வெள்ளை அடித்துக் கொண்டிருந்திருக்கின்றனர்) எனக் காரணம் காட்டி னாலும், பீரோவில் இருந்த கோப்புகள்; மேஜை நாற்காலிகள் எரிவது என்பது எப்படி...? என்பதே இங்கு ஐயப் பாடு. ஒரே நேரத்தில் அத் தனை அறைகளும் பற்றி யெரிந்தது எப்படி என்பதும் சந்தேகமா யுள்ளது.

- தீயணைப்பு வண் டிக்கு உடனே தகவல் தெரிவித்திருந்தால் உடனே வந்து (5 நிமிட

- இதே அலுவலகத்தில் அலுவலர் ஒருவர் சில வருடங் களுக்கு முன் படுகொலை செய்யப்பட்டார். அதற்கு ஏதோ தனிப்பட்ட காரணங்கள் எனச் சொன்னாலும் இப்போது நடந்த இத் தீவிபத்துக்குப் பிறகு, அதில் ஏதும் பின்னணி யிருக்குமோ என சந்தேகிக்க வைக்கிறது.

இது குறித்து தொலைபேசி உயர் அதிகாரி ஒருவரைத் தொடர்பு கொண்டதில், "இந்தத் தீ விபத்து காரணமாக ஏற்பட்டிருக்கும் வாடிக்கையாளர்களின் சிரமம் குறைக்க, இப்போதே வேறு இடத்தில் இரண்டு கவுண்டர்கள் செயல்பட்டு வருகின்றன. எரிந்தவற்றில் ஸ்டாப் ஃபைல்கள் எவ்வளவு என்பது குறித்து உறுதியான ரிப்போர்ட் வந்த பின்தான் சொல்ல முடியும். இப்போது விசாரணை நடந்து வருகிறது. ஒரு வாரத்திற்குள் சரியான ரிப்போர்ட் வந்து விடும். என்பது சதம் ஸ்டாஃப் பைல்களை எடுத்து விட்ட னர், பாதிப்பில்லாமலேயே...! எரிந்த கம்ப்யூட்டர்கள் 20க்கு மேல் என்பது கற்பனை. 10-க்குள் இருக்கும். வாடிக்கையாளர் களின் ஃபைல்கள் எதுவும் இதில் எரியவில்லை என்பது நிஜம்...." என்றார்.

கட்டுரை, படங்கள் : கேயெஸ்வி

## காதல் டைரிக் குறிப்பு :

**என்னிடம் இரண்டு உயிர்கள் இருந்தால்
ஒன்றை உனக்குத் தருவேன்.
இன்னொன்றை
உனக்காகத் தருவேன்!**

அந்தக் கட்டடத்தின் வாசலில் பைக்கை நிறுத்தி இறங்கினான் அரவிந்த். ஹெல்மெட்டைக் கழற்றினான். ரியர்வியூ கண்ணாடியில் பார்த்துக் கொண்டு லேசாகக் கலைந்திருந்த தலையை விரல்களால் சரிசெய்து கொண்டான். குளிர் கண்ணாடியைக் கழற்றி சட்டைப் பாக்கெட்டில் செருகிக் கொண்டான்.

இரண்டு மாடிகள் மட்டும் கொண்ட அந்தக் கட்டடத்தின் மாடிப்படிகளின் அருகில் - மரப்பலகையில் அங்கே இருக்கும் அலுவலகங்களின் முகவரிகளை எழுதி வைத்திருந்தார்கள்.

கேரவன் ஏஜென்சீஸ் இரண்டாவது மாடியில் இருப்பதைப் பார்த்து விட்டு படிகள் ஏறினான்.

இரண்டாவது மாடியில் நான்கைந்து அலுவலகங்கள் இருந்தன. அதில் கேரவன் ஏஜென்சியின் சிறிய போர்டைப் படித்து விட்டு கதவைத் தள்ளி உள்ளே வந்தான்.

ஒரு செவ்வக ஹால். ஒரு பக்கம் தனியறை ஒன்று. அவ்வளவே அலுவலகம். ஹாலில் போடப்பட்டிருந்த மேஜைகளில் ஏழெட்டுப் பேர் தங்களுக்குள் பேசிச் சிரித்துக் கொண்டிருக்க, இவனது வருகையில் சிரிப்பு நின்று போய் எல்லோரின் பார்வையும் இவன் மேல் விழுந்தது.

பொதுவாகப் பார்த்து, "மானேஜர் மிஸ். பிருந்தாவைப் பார்க்கணும்" என்றான்.

"நீங்க?" என்றான் குண்டான இளைஞன்.

"என் பேர் அரவிந்த். அவங்களுக்குத் தெரியும்."

இவன் பெயரைச் சொன்னதும் அந்த இளைஞன் நாற்காலியில் சரிந்து அமர்ந்திருந்தவன் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்ததில், பிருந்தா, அலுவலகத்தில் தன்னைப் பற்றிப் பேசியிருக்கிறாள் என்பதை அவனால் புரிந்து கொள்ள முடிந்தது.

"மேடம் இன்னும் வரலை சார். இப்ப வர்ற நேரம்தான். நீங்க அந்த ரூம்ல வெய்ட் பண்ணுங்க. சேது, சாரை உள்ளே உக்கார வெச்சி ஏ.சி. போட்டு விடு."

சேது வழிநடத்தி தனியறைக்குள் அழைத்து வந்து நாற்காலி காட்டியதும், "ஃபேன் போதும். ஏ.சி. வேணாம்" என்றான் அரவிந்த்.

"ஏதாச்சும் குடிக்கிறீங்களா சார்? காப்பி, கூல்ட்ரிங்ஸ்?"

"ஒண்ணும் வேணாங்க."

சேது விலகியதும் எளிமையான அழகுடனிருந்த அந்த அறையைப் பார்த்தான். ஒரு சிறிய தனி மேஜை சுவரோரமாகப் போடப்பட்டும் பாண்டிச்சேரி 'அன்னை'யின் படம் சாய்த்து வைத்துப் புதிய மலர்கள் அழகாக அமைக்கப்பட்டுமிருந்தன. கொளுத்தி வைக்கப்பட்டிருந்த ஊதுபத்திகள் அறை முழுக்க சந்தன வாடையை நிறைத்துக் கொண்டிருந்தன.

அகலமான மேஜை மேல் ஃபைல்கள், காலண்டர், பேனா ஸ்டாண்ட், டைரி, டெலிபோன் எல்லாமே சுத்தமாக இருந்தன. மேஜைக் கண்ணாடிக்கு அடியில் அன்னை தெரஸாவின் படம் மட்டும் செருகப்பட்டிருந்தது.

சற்று நேரத்தில் வரப் போகிற பிருந்தா, தான் சொல்லப் போவதை எப்படி எடுத்துக் கொள்வாள் என்று யோசித்தான் அரவிந்த்.

நிச்சயமாக அந்த அழகான முகம் ஏமாற்றத்தில் வாடிப் போகும். 'என்னமோ பெரிசா உணர்ச்சிபூர்வமா வாக்குறுதி எல்லாம் கொடுத்தியே...' என்று அவள் பார்வை, வார்த்தைக்கு அவசியமின்றிக் கேள்வி கேட்கும். அவள் மனதில், எனக்கான உயரமான இடத்திலிருந்து தொபீலென்று கீழே விழுவேன்.

ஆனால், வேறு வழி இல்லையே....

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு கதவைத் திறந்து கொண்டு பரபரப்பாக உள்ளே வந்தாள் பிருந்தா.

"வாங்க அரவிந்த். குட்மார்னிங்" என்றாள் மலர்ச்சியாக.

மெரூன் நிறத்தில் சூரிதார் அணிந்திருந்த அவள் நெற்றியில் வட்ட ஸ்டிக்கர் பொட்டு பளிச்சென்று இருந்தது - அவளின் புன்னகையைப் போலவே.

"குட்மார்னிங்" என்றான்.

"ஒரே ஒரு செகண்ட் ப்ளீஸ்...'' என்று அன்னை

**பட்டுக்கோட்டை பிரபாகர்**



## "சிவாஜி அல்வா!"

என் மனைவி எனக்குக் கல்யாணமான புதிதில் அல்வா கிளறினாள். அது பாத்திரத்தை விட்டு வராமல் மிகவும் சிரமப்படுத்தியது. "என்ன செய்கிறாய்" என்று கேட்டபோது, "சிவாஜி அல்வா" என்றாள். நான் ஆச்சர்யமாக, "சிவாஜி அல்வாவா?" என்று கேட்டேன்.

"ஆமா, எப்படி நடிகர் திலகம் சிவாஜி அவர் நடிக்கும் பாத்திரத்தோடு ஒன்றி விடுகிறாரோ அந்த மாதிரி இந்த அல்வா பாத்திரத்தோடு ஒட்டிக் கொண்டிருக்கு, பாருங்க" என்றாள்!

– பி.ஆர். பார்த்தசாரதி

படத்திற்கு நேராகச் சென்று பத்து விநாடிகள் கண்களை மூடி நின்றாள். படத்தைத் தொட்டு உதட்டில் வைத்துக் கொண்டு தன் நாற்காலியில் அமர்ந்தாள், "போன் செய்திருந்தா நானே உங்களை வந்து பார்த்திருப்பேனே" என்றாள்.

"ஏன்? நான் உங்க ஆபீசுக்கு வர்றதில ஏதாச்சும் ப்ராப்ளம் இருக்கா?"

"சேச்சே! உங்களுக்கு எதுக்குச் சிரமம்னுதான் சொன்னேன். வழக்கமா பத்து மணிக்கு கரெக்ட்டா வந்துடுவேன். இன்னைக்கு பேங்க் மானேஜரைப் பார்க்க வேண்டியிருந்திச்சி. அதான் லேட். நீங்க வரப் போறது தெரிஞ்சிருந்தா உங்களைக் காக்க வெச்சிருக்க மாட்டேன்."

"அதெல்லாம் பரவால்லை, விடுங்க."

"ஏதாச்சும் சாப்பிடறீங்களா?"

"நோ, தேங்ஸ்."

'அப்புறம்?' என்பது போல அவள் அமைதியாக கைகளைக் கட்டிக் கொண்டு அவனைப் பார்த்தாள்.

"பிருந்தா, உங்களுக்கு அவசரமான வேலைகள் இருந்தா முதல்ல அதைப் பார்த்துடுங்க. நான் வெய்ட் பண்றேன். எனக்குக் கொஞ்சம் விவரமாப் பேசணும்."

"ஒரே ஒரு வேலை பார்த்துடறேன். பேங்க் மானேஜர் ஒரு டீட்டெய்ல்ஸ் கேட்டிருக்கார். அதை அனுப்பச் சொல்லணும். ஒரே ஒரு நிமிஷம், ப்ளீஸ்..."

பிருந்தா எழுந்து ஹாலுக்குச் சென்று ஒரே நிமிடத்தில் திரும்ப வந்து உட்கார்ந்து, "சொல்லுங்க அரவிந்த்" என்றாள்.

"ரொம்பப் பீடிகை எல்லாம் போட விரும்பலைங்க. ஏன்னா நீங்க ரிசல்ட்டுக்காகக் காத்துக்கிட்டிருக்கீங்கன்னு எனக்குத் தெரியும். 'பிருந்தா, உங்க ஏஜென்சி உரிமை ரத்தாகாம தடுக்க என்னால முடியலை. ஐ'ம் டெர்ரிபிளி ஸாரி" என்றான் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு.

"பரவால்லைங்க. நீங்க எனக்கு உதவ நினைச்சதும், முயற்சி செஞ்சதுமே பெரிய விஷயம். இவ்வளவு பொறுப்பா நேர்ல வந்து பதில் சொல்றீங்களே, இதுக்கே நான் தேங்ஸ் சொல்லணும்" என்றாள் கொஞ்சமும் புன்னகை மாறாமல்.

"நான் சொன்னது உங்களுக்கு அதிர்ச்சியா இல்லையா? ஏமாற்றமா இல்லையா?"

"அதிர்ச்சியா இல்லை. ஆனா ஏமாற்றமா இருக்கு. ஆனா வலிக்கலை."

"அதெப்படி வலிக்காம இருக்கும்?"

"எக்கச்சக்கமா எதிர்பார்ப்பு வெச்சாத்தான் வலிக்கும்."

"அப்படின்னா முதல்லேர்ந்தே நான் உங்களுக்குச் சாதகமா செய்து கொடுப்பேன்னு உங்களுக்கு நம்பிக்கை இல்லையா?"

"நம்பிக்கை இருந்திச்சி. ஆனா எதிலயும் நான் மூழ்கிப் போறதில்லை. டோட்டல் டிப்பண்டன்ஸ் பிடிக்காது. நீங்களா முன் வந்து உதவி செய்றேன்னு சொன்னீங்க. சரி, முயற்சி செய்யுங்கன்னு சொன்னேன். என் ஒருத்தியோட தனிப் பிரச்னைன்னா உங்க சிபாரிசு கூட விரும்பியிருக்க மாட்டேன். இந்த ஆபீஸ்லே மத்த எட்டுப் பேரோட வேலை போகாம இருக்க ஏதாவது செய்ய முடியுமான்னுதான் மெனக்கெட்டேன். பரவால்லைங்க."

"ஆனா இந்தப் பதிலைச் சொல்றதுக்கு எனக்குச் சங்கடமா இருக்கு. உறுத்துது. ஐ ஃபீல் கில்ட்டி பிருந்தா."

"இதிலென்னங்க இருக்கு. நல்ல மன

சோட, நல்ல நோக்கத்தோட முயற்சி செய்தீங்க. முடியாம போச்சி. நீங்க என்ன செய்வீங்க, பாவம்! எங்க ஏஜென்சி உரிமை ரத்தாகறதும், ரத்தாகாததும் உங்க கைல இல்லையே...."

"இல்லைங்க. என் கைலதான் இருந்திச்சி – இன்னிக்குக் காலைல நான் எங்கக் காவுக்கு போன் செஞ்சி என் முடிவைச் சொல்ற வரைக்கும்."

பிருந்தா அவனைப் புரியாமல் பார்த்தாள்.

"நான் உங்களை என்னோட நெருக்கமான ஒரு... ஒரு... தோழி மாதிரி நினைச்சி சில விஷயங்களை வெளிப்படையாப் பகிர்ந்துக்க விரும்பறேங்க. ஏன்னா... ஏன் என்னால முடியலைன்னு நீங்க தெளிவாப் புரிஞ்சுக்கணும்."

"சொல்லுங்க."

"என் குடும்பத்தில எல்லோருக்கும் என் மேல அவ நம்பிக்கை இருக்கு. ஒரு சவாலா சாதிச்சிக் காட்டணும்னு துடிப்புல இருக்கேன் நான். ஒரு பைசா வீட்ல எதிர்பார்க்காம வெளி ஏற்பாடுகள்ல பத்து லட்ச ரூபாய் இன்வெஸ்ட் செஞ்சி ஆஃப்செட் பிரிண்டிங் தொழில்ல இறங்கப் போறேன். அதுக்கான தீவிரமான ஏற்பாடுகள்ல நான் இருக்கறேன். எங்கக் காவுக்கு இது சுத்தமாப் பிடிக்கலை. அதுக்குப் பல காரணங்கள் இருக்கு. எனக்காக மாச சம்பளத்தில அவ ஒரு வேலை பார்த்து வெச்சிருக்கா. தொழில் ஆரம்பிக்கிற ஐடியாவை விட்டுட்டு நான் வேலைக்குப் போகணும்னு அவ வற்புறுத்திக்கிட்டிருக்கிற சூழ்நிலையில தான் உங்க விஷயமா நான் சிபாரிசுக்குப் போனேன். இதைச் சாக்கா வெச்சிக்கிட்டு கண்டிஷன் போடறா. கிட்டத்தட்ட பிளாக் மெயில்!"

"என்ன கண்டிஷன்?"

"நான் என் பிஸினஸ் ப்ராஜெக்டை ட்ராப் செஞ்சிட்டு அவ சொல்ற வேலைக்குப் போறதாயிருந்தா உங்க ஏஜென்சியை ரத்து செய்யாம இருக்காளாம்."

"இந்த பிசினஸ் மேட்டர்ல போயி பர்சனல் மேட்டரை ஏன் சேர்க்கறாங்க?"

"அதான் யாமினியோட சாமர்த்தியம். இப்படி ஒரு கண்டிஷனைப் போட்டு யோசிச்சிச் சொல்லுன்னுட்டா. எனக்கு ரொம்பக் குழப்பமாயிடுச்சி. என்னமோ தெரியலை, உங்களைப் பார்த்ததிலேர்ந்து, பேசினதிலேர்ந்து உங்களுக்கு உதவி செய்யணும்னு ஒரு துடிப்பு. அதனாலதான் உணர்ச்சிவசப்பட்டு வாக்குக் கொடுத்துட்டேன். ஆனா பிஸ்னெஸ்ங்கிறது என்னோட லைஃப் ப்ராஜெக்ட். என் எதிர்காலத்தை, முன்னேற்றத்தைத் தீர்மானிக்கிற விஷயம். அதை விட்டுக் கொடுக்க மனசு வரலை. நீங்க என்னைப் பத்தி கேவலமா நினைச்சாலும் பரவால்லைன்னு நான் முடிவு செஞ்சி, காலைல அக்காவுக்கு போன் செஞ்சி 'உன் நிபந்தனைக்கு நான் ஒத்துக்கறதா இல்லை. நீ ஏஜென்சியை கேன்சல் செய்யாம இருக்கிறதுதான் மனிதாபிமானம். அப்புறம் உன் இஷ்டம்'னு சொல்லிட்டேன். முடிவெடுத்துட்டேன். உங்ககிட்டயும் அதைச் சொல்லிட்டேன். ஆனா ஒரு குற்ற

## எனக்கா நடிக்கத் தெரியாது?

நடிப்பதற்காக வந்திருந்த அந்த இளைஞனை மேலும் கீழும் பார்த்த டைரக்டர் "நீ நன்றாக நடிப்பாயா?" என கேட்டார்.



"என்னைப் பார்த்தா அப்படிக் கேட்டு விட்டீர்கள்? நான் ஒரு நாடகத்தில் இறப்பதைப் போல நடித்ததைப் பார்த்து பார்வையாளர் ஒருவர் மயங்கி விழுந்து விட்டார்! அப்படி என் நடிப்பு இயல்பாக நம்பும்படி இருந்தது" என்றான் அவன்.

"யார் அந்த ரசிகர்?" என்று கேட்டார் டைரக்டர்.

"நான் அவரிடம் பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கி இருந்தேன்" என்றான் அவன்!

– 'புகழ் பெற்ற ஜோக்ஸ்' என்ற நூலிலிருந்து: மலர் சூர்யா



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
சென்னை-600 063. தொலைபேசி:2376129



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 50 மாணவர்களும் 20 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு , உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| காலை சிற்றுண்டி (70 பேருக்கு) | ரூ. | 500/- |
| மதிய உணவு (இனிப்புடன்) | ரூ. | 1,000/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. | 750/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 300/- |
| ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. | 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 40,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக் கொள்கிறோம்..

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD/MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்,
சுவாமி சர்வாத்மானந்தர்.



(வருமான வரி விலக்கு (section - 80-G) உண்டு)

உணர்ச்சி என்னைக் குடையுதுங்க."

"ஏன் இப்படியெல்லாம் நினைக்கிறீங்க? எனக்கு என் ஏஜென்சி உரிமை முக்கியம். உங்கக்காவுக்கு அவங்க ஈகோ முக்கியம். உங்களுக்கு உங்க ப்ராஜெக்ட் முக்கியம். எல்லாருமே செல்ஃபிஷ்தானே? இதிலே நீங்க ஃபீல் பண்றதுக்கும் எதுவும் இல்லை. உங்களைக் கேவலமா நினைக்கிறதுக்கும் எதுவும் இல்லை."

"நிஜமாவா? என் மேல உங்களுக்கு எரிச்சல் எதுவும் வரல்லையா?"

"இல்லைங்க. 'என்னால முடியலை, ஸாரி'ன்னு நீங்க ரெண்டே வரி போன்ல சொன்னாக் கூடப் போதுமே. நேர்ல வந்து இவ்வளவு விவரமாச் சொல்லி, ஃபீல் பண்றீங்களே... இது உங்க இதயத்தில இருக்கற இரக்கத்தையும், பண்பாட்டையும் தானே காட்டுது. உங்க மேல எனக்கு எந்த வருத்தமும் இல்லை. கில்டியா ஃபீல் பண்ணாதீங்க. உங்க ப்ராஜெக்ட் அமோகமா சக்ஸஸ் ஆகறதுக்கு என்னோட வாழ்த்துக்கள்."

தெம்பாக நிமிர்ந்து அமர்ந்த அரவிந்த், "தேங்ஸ்" என்றான்.

"இப்ப எதாச்சும் சாப்பிடலாமா?" என்று மணியடித்து பியூனை வரவழைத்து, "உங்களுக்கு பெப்சிதான் பிடிக்குமில்லை? ஒரு பெப்சி வாங்கிட்டு வா" என்று அனுப்பினான்.

"உங்களுக்கு ஒரு கஷ்டமான தகவலைச் சொன்னவனுக்கு கூல்ட்ரிங்கா? இது அநியாயங்க!"

"ஏன் அப்படிப் பார்க்கணும்? நெருக்கமான தோழின்னு என்னை நீங்க குறிப்பிட்டீங்க இல்லே. ஒரு ஃபிரெண்ட் தன் ஃபிரெண்டுக்கு ட்ரிங்ஸ் வாங்கித் தர்றதில்லையா?"

கூல்ட்ரிங் குடிக்காமலேயே தொண்டையில் ஜில்லென்று இறங்கின அவள் வார்த்தைகள்.

"அடுத்து நீங்க என்ன செய்றதா இருக்கீங்க பிருந்தா?"

"உங்கக்கா கேட்ட தொகையைக் கொடுத்தா நிலைமை சரியாயிடும். ஆனா எனக்கு அதில இஷ்டமில்லைங்க. தேவைகளுக்காகக் கொடுத்துப் பழகித்தான் வாங்கறவங்க அதிகமானாங்க. லஞ்சத்தில கொடுக்கறவங்க வாங்கறவங்கன்னு ரெண்டு



"இதோ பார்த்தீங்களா... இதான் எங்க 'ஹெட்' ஆபீஸ்."

— பாஸு

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

பேர் பங்கும் ஈக்வலா இருக்கு. எங்க எம்.டிக்கும் இந்த பிசினெஸ்ல அவ்வளவா இன்ட்ரெஸ்ட் இல்லை. அதனால முறையா 'வைண்ட் அப்' பண்ண வேண்டியதுதான். எப்படியும் சட்டப் பிரகாரம் மூணு மாச சம்பளம் கொடுத்துத்தான் நிறுத்துவோம். அந்த மூணு மாசத்துக்குள்ளே அவங்கவங்க வேலை தேடிக்க வேண்டியதுதான்."

"நீங்க வேற வேலை ஏதாவது சொல்லி வெச்சிருக்கீங்களா?"

"இப்பத்தானே உறுதியான முடிவு தெரிஞ்சிருக்கு. இனிமேதான் பேப்பர் பார்த்து அப்ளை செய்ய ஆரம்பிக்கணும்."

"பிருந்தா, உங்களோட சர்ட்டிஃபிகேட்ஸ் காப்பி, பயோ-டேட்டா காப்பி எல்லாம் எனக்கு ஒரு செட் கொடுங்க."

"எதுக்கு?"

"எனக்குத் தெரிஞ்ச இடங்கள்ல முயற்சி செய்றேன் உங்களுக்காக."

"ரொம்ப தேங்ஸ். என் மேல உங்களுக்கு என்ன அரவிந்த் இவ்வளவு அக்கறை?" என்று தலையைச் சாய்த்துக் கேட்டாள் பிருந்தா.

இதுதான் சரியான சமயம்.

'பிகாஸ், ஐ லவ் யூ!' என்று சொல்லி விடலாமா?

அரவிந்த் அவசரமாக யோசித்தான்.

(தொடரும்)

# அவமானம் தந்த வெகுமானம்




மிகக் குறைந்த வருமானம் இருந்தாலும் சேமிப்பின் பயன் உணர்ந்த குடும்பம் என்னுடையது.

ஒரு நாள் எங்கள் நெருங்கிய உறவினர் ஒருவர் எங்கள் வீட்டிற்கு வந்தார். கல்யாண வீடியோ கேசட் ஒன்றை எடுத்து வந்து அதைப் போட்டுப் பார்க்க வேண்டும் என சொன்னார். ஒரு கடையில் VCR-ஐ எடுத்து வந்தோம். எங்கள் வீட்டில் டிவி இல்லாததால் பக்கத்து வீட்டுக்காரரிடம் TV கேட்டோம். ஆனால் அவர் TV எல்லாம் கடன் கொடுக்க மாட்டேன். முடிந்தால் சொந்தமாக வாங்கி போட்டு பாருங்கள் என்றார். உறவினர் முன் எங்களுக்கு மிகவும் அவமானமாக போய்விட்டது. கடைசியில் கேசட் போடவில்லை. கலர் TV புதிதாக வாங்கினால் ரூ.16,000 வேண்டும். தவணை முறையில் வாங்கினால் கூட முன்பணம் 6000 ரூபாய் கட்ட வேண்டும். இந்நிலையில் என் தந்தை நாம் கட்டி வரும் ஸ்ரீராம் சீட்டு நாளை ஏலம். நீ போய் ஏலம் எடுத்துவா நாம் TV வாங்கலாம் என்று ஊக்கம் கொடுத்தார். நான் மிகவும் மனமுடைந்த நிலையில் ஏலம் எடுக்க போனேன். ஆனால் என்பக்கம் அன்று அதிர்ஷடம் இருந்தது. நான் சீட்டை அன்று எடுத்து விட்டேன். பக்கத்து வீட்டுக்காரர் TV வாங்க முடியுமா ? என கேலியாக கேட்டதற்கு பதிலடி கொடுக்கும் வகையில் ரிமோட் கண்ட்ரோலுடன் கலர் TV வாங்கி விட்டோம்.

எங்களை தலை நிமிர்ந்து நடக்க வைத்த ஸ்ரீராம் சிட்ஸை எங்களால் மறக்க முடியாது.

N. மெய்கண்டமூர்த்தி, சென்னை-600 063.







1998 மார்ச் 22
ஈசுவர பங்குனி 8
மலர் : 56
இதழ் : 34

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




# ஜெயலலிதாவின் துரோகம்!

**க**டைசியாக வந்துள்ள செய்திகள், பி.ஜே.பிக்கும் அ.தி.மு.கவுக்கும் இடையே சமரசம் ஏற்பட்டிருப்பதாகவும் பி.ஜே.பிக்கு, ஆட்சி அமைக்கத் தமது ஆதரவுக் கடிதத்தை ஜெயலலிதா அனுப்பி வைப்பதாகக் கூறிவிட்டார் என்றும் சொல்கின்றன. மத்தியில் ஆட்சி மலர்ந்து, நாடு 'அப்பாடா' எனப் பெருமூச்சு விடலாம். ஆனால் இப்போது ஏற்பட்டுள்ள மனக்கசப்பு கடைசி வரை நீடிக்கும். மேலும் ஆட்சி அமைவதற்கு முன்னால் ஜெயலலிதா ஏற்படுத்தியது போன்ற நெருக்கடிகளை, ஆட்சி அமைந்த பிறகும் உருவாக்க மாட்டார் என்பதற்கு உத்தரவாதமில்லை. இதனால் பி.ஜே.பி. கூட்டணி ஆட்சி, ஐந்தாண்டுக் காலம் நிலைப்பதும் கேள்விக்குறியாகிறது.

இந்தச் சம்பவம், ஜெயலலிதாவின் உண்மை சொரூபம் என்ன என்பதை இப்போதாவது பி.ஜே.பி. தலைவர்களுக்கு உணர்த்தியிருக்கும். கூடா நட்பு ஏற்படுத்தக் கூடிய தீமைகளைப் புரிந்து கொள்ள உதவியிருக்கும்.

கருணாநிதியை டிஸ்மிஸ் செய்ய வேண்டும்; தம் மீது போடப்பட்டுள்ள வழக்குகள் வாபஸ் பெறப்பட வேண்டும்; இதற்கு அனுசரணையாக சு. சுவாமி நிதி மந்திரியா




கவும், வாழப்பாடி சட்ட அமைச்சராகவும் நியமிக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனை களை முதலில் விதித்தார் ஜெயலலிதா. நல்ல வேளையாக 'பி.ஜே.பி ஆட்சி அமையா விட்டாலும் பாதகமில்லை; இத்தகைய மிரட்டலுக்கு அடிபணிய மாட்டேன்' என்று வாஜ்பாயி உறுதியாக இருந்தார். அந்த வீரத்தைப் பாராட்டலாம்.

பிளாக் மெயிலுக்கு வாஜ்பாயி பணியமாட்டார் என்று புரிந்ததும் தம் நிலையை மாற்றிக் கொண்டு, 'அதெல்லாம் பத்திரிகையாளர் எழுதிய கட்டுக்கதை' என்றும் தாம் தமிழகத்தின் நலன் கருதியே சில நிபந்தனைகளை முன்வைத்ததாகவும் கூறி, புதிய பட்டியலை வெளியிட்டார் ஜெயலலிதா. காவிரி நதி நீர் பங்கீடு, 69 சதம் இட ஒதுக்கீடு, பெரியார் அணை மேல் மட்டத்தை உயர்த்துவது, தமிழுக்கு அகில இந்திய ரீதியில் சிறப்பிடம் போன்ற அம்சங்கள் அந்தப் பட்டியலில் இடம் பெறுகின்றன.

பத்திரிகைகள் கற்பனையாக எதையும் எழுதி விடவில்லை. பி.ஜே.பி. தரப்பில் வாஜ்பாயி போன்ற தலைவர்கள் சொன்னதைத்தான் பிரசுரித்தன. ஆக, பொய் சொல்வது யார், வாஜ்பாயியா, ஜெயலலிதாவா அல்லது பத்திரிகைகளா என்பதை மக்கள் எளிதில் புரிந்து கொள்ளலாம்.

இந்த நிபந்தனைகள் எதையும் ஜெயலலிதா கூட்டணி அமைத்தபோது விதிக்கவில்லை. அப்போது நிபந்தனையற்ற ஆதரவு, நிலையான அரசு, திறமையான பிரதமர் என்று வாக்களித்து விட்டு, இப்போது நிபந்தனைகள் விதிப்பது நம்பிக்கை துரோகமாகும். இந்த பச்சைத் துரோகம் பி.ஜே.பிக்கு மட்டும் செய்கிற துரோகமல்ல;




இவரை நம்பி நிலையான மத்திய அரசை எதிர்பார்த்து பி.ஜே.பி. கூட்டணிக்கு வாக்களித்த அனைத்துத் தமிழருக்கும் செய்யப்பட்ட ஜனநாயக துரோகம். ஒரு வகையில் தேச துரோகம் என்றே சொல்லலாம்.

தமிழர் நலனைக் காக்க வேண்டும் என்ற எண்ணம் இருப்பின், அதை அமைச்சரவையில் பங்கேற்று, ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்து, பிறகு அமைச்சரவைக் கூட்டங்களில் விவாதித்து வெற்றி பெற வேண்டுமே தவிர, பிளாக் மெயில் ஆயுதத்தைப் பயன்படுத்தி அந்த உரிமைகளைப் பெறுவது தமிழகத்துக்குத் தீமையே ஏற்படுத்தும். பெறப்படுகிற நன்மைகள் அன்புடன், மனமுவந்து வழங்கப்பட்டவையாக இருக்க வேண்டும். வேண்டா வெறுப்புடனும் ஆத்திரத்துடனும் கொடுத்து அழுவதாக இருந்து விடக்கூடாது. இத்தகைய போக்கு பாரதத்தின் ஒருமைப்பாட்டுக்கே உலை வைக்கும். அமைச்சரவையை அமைப்பது பிரதமரின் ஏகபோக உரிமை என்பதை யாரும் மறக்கக் கூடாது.

ஜெயலலிதா ஆடிய நாடகத்தில் முதல் காட்சி, இரண்டாவது காட்சி முடிந்து, மூன்றாவது காட்சியாக இப்போது ஆதரவுக் கடிதம் போய்ச் சேரும் கட்டம் வந்திருந்தாலும், இந்த நாடகத்தினால் ஜெயலலிதா தம் மீது மட்டுமின்றி, தமிழகத்தின் மீதே ஒரு வெறுப்பை அகில இந்திய ரீதியில் கோடானுகோடி மக்களிடம் தோற்றுவித்திருக்கிறார். இந்த ரணம் சுலபத்தில் ஆறாது.

இது போன்ற காரியங்களால் ஜெயலலிதா செய்தியில் இடம் பெறலாம்; மக்களின் இதயங்களில் இடம் பெற முடியாது. ●

• கழிவு நீரில் தென்னை...

எதிர்கொள்ளும் 21-ம் நூற்றாண்டில் மக்களுக்குச் சவால் விடும் பிரச்னை சுற்றுச் சூழல். இது குறித்து விரிவான ஆராய்ச்சி மேற்கொண்டு கெட்டுப் போன இன்றைய சுற்றுச் சூழலையும் காப்பாற்றி விட முடியும் என்கிறார் இ.ஆர்.ஆர். சதாசிவம். பொள்ளாச்சி கிணத்துக்கடவு பக்கம் ஏலூரைச் சேர்ந்தவர். மூச்சு, பேச்சு, உடல் பொருள் எல்லாமே இவருக்குக் காடுகள்... காடுகள்... காடுகள்...! சமீபத்தில் இது சம்பந்தமாய் 'World Environment Congress' அமைப்பின் உலகந்தழுவிய விருதை நம் இந்திய ஜனாதிபதியின் கைகளினால் பெற்ற இவரை, இவரது இல்லத்தில் சந்தித்துக் கேட்டபோது, தாம் வடிவமைத்த காடுகளின் உலகத்திற்கே அழைத்துப் போய் நம்மை பிரமிப்பில் ஆழ்த்தி விட்டார்...



# "வறண்ட நிலத்தையும் வளமாக்கிக் காட்டுவேன்!"

"இதுக்குப் பேர் RDX! Sandal Wood-ஐ விட பல மடங்கு விலை மதிப்பு மிக்கது. இது சூடான் வேலி. யாரும் தோட்டத்துக்கு உள்ளே நுழையாமல் இருக்க நல்ல வாட்ச்மேன். இது டீக். இதோ பாருங்க ஏடான் சோனிடா ட்ரீ... (இதை வச்சு 15 வருஷம் கழிச்சுப் பார்த்தா தலை கீழா பிடுங்கி நட்ட மாதிரியிருக்கும்.) இது டெடிட்டோட்டா... பகவத்கீதையில 16-ம் சுலோகத்தில் வரக்கூடிய சத்யகீர்த்தி மரம். வறண்ட பாலைவனத்துல வச்சாக் கூட செழிப்பா வரும். குடைஞ் செடுத்தா உள்ளுக்குள்ள நிறைஞ்ச தண்ணி வரும். ஒட்டகம் சேமிக் கிற மாதிரி தண்ணிய, சேமிக்குற மரம்."

– இன்னும்... இன்னும்.... வாயில் நுழையாத மரங்களின் பெயர் களைச் சொல்லிச் சொல்லிக் காட்டிய மனிதர், மரங்களைக் கட்டி யணைக்காத குறையாய் வருடிக் கொடுக்கிறார்.

அப்படியென்ன இந்த மரங்களின் மீது ஈர்ப்பு...? வனங்களின் மீது மோகம்...?

"மரங்கள் ஒன்றுக்கொன்று ஆதரவாய் இருப்பதை ஆறு வயதி லேயே இனங்கண்டு, என்னையறியாமல் இந்த ஆய்வில் ஈடுபட ஆரம்பித்தேன். ஒரு காலத்தில் எனது தோட்டத்திலிருந்த நூற்றுக் கணக்கான தென்னை மரங்கள் என் கண்முன்னே வாடி விழுந்த போது மிகவும் நொந்து போனேன். அதிலிருந்து என்னுடைய சிந் தனை எல்லாம் தாவர வாழ்க்கையிலேயே ஒன்றி விட்டதால் சரா சரி மனித வாழ்க்கைக்குக் கூட திரும்ப முடியவில்லை...!"

சராசரி மனித வாழ்க்கைக்குக் கூடத் திரும்ப முடியாது இவர்



• சதாசிவம்

## — சவால் விடும் விவசாயி

என்ன சாதித்தார் என்பதுதானே நமது கேள்வி. நீர் மற்றும் – மண்ணின் தன்மையை ஆராய்ந்து அதற்கேற்ற விதை விதைப்பது. எதற்கும் உதவாது என வீணடிக்கப்பட்ட இடங்களில் மரப்பயிர்களை உருவாக்கு வதன் மூலம் அப்பகுதி மக்களின் வாழ்க்கை முறையை மேம்படுத்துவது. கிராமங்களில் நம்பிக்கையிழந்து, நகரங் களை நோக்கிச் சென்ற மக்களைத் திரும்பி வருமாறு செய்ய, கிராமங்களை செழிப்படையச் செய்வது... இதற்கான தொழில் நுட்பங்களை உருவாக்குவது.. இன்றைய நவீன வேளாண்மை பக்க விளைவை ஏற்படுத்தி, மண்ணை நச்சுத் தன்மையாய் ஆக்கியதிலிருந்து மீண்டு, பழைய நிலைக்கு வர இயற்கை வேளாண்மையை எங்ஙனம் கைக் கொள்வது? என்பது பற்றியெல்லாம் வெறும் ஆராய்ச்சிக் கட்டுரைகளாய் எழுதி வைத்துக் கொள்வதோடு நிறுத்திக் கொள்ளவில்லை இவர்.

அத்தனையையும் செயலாக்கத்தில் கொண்டு வந்து உறுதிப்படுத்தியுள்ளார் என்பதை நம்மால் கண்கூடாகக் காண முடிந்தது.

திருப்பூரில் சாயக் கழிவுகள் மற்றும் நச்சுத்தன்மையுள்ள நீரைப் பயன் படுத்திக் கூட பத்து ஏக்கர் நிலப்பரப்பில் காடுகளை (டீக், வேம்பு எனப் பயிரிட்டு) உருவாக்கி நச்சுச் சூழலைச் சரிப்படுத்த முடியும் என்று காட்டுகிறார். அதே போல் கணுவாய் பக்கம் (கோவை) சுமார் 15 ஏக்கருக்கு மேல் உருவாக்கி யுள்ள காடுகளில் பாயும் நீர் எது தெரி யுமா? 'மொசைக் டைல்ஸ்' கழிவு நீர்! எதற்கும் உதவாத தரிசு நிலங்களைக் கூட (நீரில்லா விட்டாலும்) மரம் வைத்து லாபம் கொழித்து (ஏக்கருக்குப் பல லட்சம்) சூழலையும் காப்பாற்றி விட முடியும் என்று சொல்லும் இவர், 5000 ஏக்கருக்கு மேலாகக் காடுகளை உரு வாக்கியுள்ளதாகக் கூறுகிறார்.

• பெட்டிட்டோட்டா (சத்தியகீர்த்தி மரம்)



## பட்டுப் புடைவை பரிசுப் போட்டி – 8; முடிவு!

**கலர் டெலிவிஷனால் ஏற்படும் பாதிப்பின் அளவும் பெயரும் '0.48 மில்லிராட் கதிர்வீச்சு' என்று, சரியான விடையை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தாலும் குலுக்கலில் தேர்ந்தெடுக்கப் பட்ட அதிர்ஷ்டசாலி வாசகி: எஸ். விஜி, வெங்கலம், ரிஷி வந்தியம் (அஞ்சல்) - 606 205.**

காடுகளில் இனங்காணப்பட்ட சுமார் 1,25,000 வகை மரங்களில் 10,000 மரங்களுக்கு மேல் இவர் ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறது. வறண்டு போன நிலத்தில் அரளிப்பூ பயிர் செய்து 250 குடும்பங்கள் பிழைக்க வழிகாட்டியாக இருந்துள்ளார். சுமார் 50 ஆயிரம் குடும்பங்களுக்கு 27 லட்சம் நாற்றுக்களை இலவசமாகவே கொடுத்துள்ளதாகக் கூறும் இந்த மனிதர், நாற்றுகளுக்காகவே Nathola Forest Farms உருவாக்கி, அந்த நர்சரி யூனிட் (நாற்றங்கால்)டில் 150 பேருக்கு வேலையும் கொடுத்திருக்கிறார்.

இவர் மூலமாய் உருவான கிராமங்கள், 123; வேலை வாய்ப்புப் பெற்ற குடும்பங்கள் ஐம்பதாயிரம், தனிமனிதர்களைக் கணக்கிட்டால், 1,42,000 என்று கொள்ளலாம் என்கின்றனர், இவரின் மாதிரிப் பண்ணையில் ஈடுபாடுள்ள விவசாயக் கல்லூரி மாணவ - மாணவியர். (பல்வேறு கல்லூரி மாணவர்களுக்கும் ஒரு வழிகாட்டுதலாய் இவர் உள்ளது வேறு விஷயம்.) பண்ணையைப் பொறுத்தவரை எது கிடைக்கிறதோ அதை வைத்தே உருவாக்குகிறார்கள். நிலத்தடி நீரை நம்பக் கூடாது என மின்சார இணைப்பையே துண்டித்து விட்டு, மழைக்காலத்தில் மட்டுமே விதை நட்டதாக - நடுவதாகக் கூறுகின்றனர்!

சரி.... இதற்கு ஆக்க சக்தி...? ஊக்க சக்தி...?

"டாக்டர் என். திவாரி IFS இந்திய நாட்டின் வனக்கல்வி மற்றும் வன ஆராய்ச்சித் தலைவராக இருந்தவரை, இந்த கிராமப்புற வன ஆராய்ச்சியிலும், ஐக்கிய நாடுகளின் கிராமப்புற மேம்பாட்டுத் திட்டங்களிலும் நான் தீவிரமாக ஈடுபட்டுச் செயலாற்றுவதற்கு ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்தார். மற்றபடி 1958 - 59 களில் என நினைக்கிறேன். பல மாநிலங்களிலிருந்தும் வந்திருந்த வேளாண் நிபுணர்களிடம் ஒரு மாநாட்டில், இந்த நவீன வேளாண்மை காரணமாகப் பிற்காலங்களில் ஏற்படும் சீர்கேடுகளைப் பற்றிச் செய்முறை விளக்கங்களோடு கருத்துக் கூறினேன். அப்போது அவர்கள் ஒருமித்துக் கூறிய ஒரே பதில், 'இந்தப் பைத்தியக்காரனைப் பிடித்து வெளியே தள்ளுங்கள்...!' என்பதுதான்...!"

"சரி வனங்களின் மூலம் வாழ்க்கையைத் திரும்பப் பெற முடியும் என நம்புகிறீர்களா?"

"நிச்சயமாக... இன்றைக்கிருக்கும் வாழ்வியல் சூழலில், விவசாயிகள் தங்களுடைய வேளாண்மையில் நம்பிக்கையிழந்து விட்டனர். தவறான வேளாண் நடைமுறைகளைச் செய்தது... ரசாயன இடு பொருள்களைக் கொண்டு நிலத்தைப் பாழ்படுத்தியது, தேவையில்லாமல் மண்ணைப் புரட்டிப் போட்டது... என எல்லாமே 50களிலிருந்து நாட்டில் பரவலாக்கப்பட்ட சுற்றுச் சூழல் விரோதமான நடைமுறைகள். மரத்தை வெட்டிவிட்டுப் பயிர் செய்வது - செய்தது பூமியை கவலைக்குரிய நோயாளியாக்கி விட்ட செயல்...!"

"அப்படியென்றால் உணவுக்கு என்ன செய்வது? மரம் ஒன்றே போதுமா?"

"இல்லை. இழந்துவிட்ட வளத்தை மேம்படுத்துவதற்காகவே மரப்பயிர் என்பதேயல்லாமல் பயிரே செய்யக் கூடாது என்பதல்ல... உதாரணத்திற்கு என் நிலத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். அதிக வருமானமுள்ள நிலத்தை விட பலமடங்கு கூடுதலான வருமானத்தை இந்த உதவாத நிலமே மரங்களின் மூலம் ஈட்டித் தந்தது. நான் சொல்லுவதெல்லாம், எதற்கும் உதவாத நிலம் என்று ஒன்றுமே இல்லை... பாலையில் கூட பயிர் செய்யலாம். எதைப் பயிர் செய்வது, எப்போது என்பதைத் தேர்வு செய்வதுதான் அறிவு.. இப்படி 1000 வகையான மரங்களை இடத்திற்குத் தகுந்த மாதிரி வகைப்படுத்தியுள்ளேன்!"

"சரி... உங்கள் ஆராய்ச்சியின் முடிவில் என்னதான் சொல்ல விரும்புகிறீர்கள்?"

"மரங்களின் மூலம் இன்னும் 10 - 15 வருடத்திற்குள் நம் நாட்டில் நிலவும் வறுமை, வேலையின்மை, மனித ஊட்டச்சத்துக் குறைபாடு என அனைத்தையும் ஒழித்து இந்தியாவை வளம் மிகுந்த ஒரு நாடாக உருவாக்க முடியும்!" என்று ஆணித்தரமாகக் கூறும் இந்த மனிதர் பற்றி, உலகம் ஏதும் அறியாமலே இருக்கிறது. இவர் என்ன செய்தார்? எதற்காக விருது பெற்றார்? என்பது உட்பட இவர் குடும்பத்திற்கே தெரியவில்லை என்பதுதான் வேடிக்கை!

கட்டுரை, படங்கள் : **கா.சு. வேலாயுதன்**

"நான் குற்றமற்றவள்; என் மீது போடப்பட்டிருப்பவை பொய் வழக்குகள். மக்கள் மன்றம் எனக்கு நீதி வழங்கி விட்டது. இனி நீதிமன்றங்கள்தான் என்னை நிரபராதி என்று சொல்ல வேண்டும்" - இவ்வாறு பேட்டியளித்திருக்கிறார் ஜெ. 'தமது புதிய செல்வாக்கைப் பயன்படுத்தி தம் மீதும், தோழியின் மீதும் தோழியின் குடும்பத்தார் மீதும் மத்திய அரசால் போடப்பட்டுள்ள வழக்குகளை ஒரே அமுக்காக அமுக்கி விடுவார் ஜெ' என்று சாதாரணக் குடிமகனும் இப்போது பேசிக் கொண்டிருக்கும் நிலையில், அந்த வழக்குகளை அனைவருக்கும் கொஞ்சம் நினைவுபடுத்த விரும்புகிறோம். எல்லாம் அந்நியச் செலாவணி மோசடி விவகாரம். பொருளாதாரக் குற்றங்கள்!

- ஜெ. ஜெ. தொலைக்காட்சிக்காக டிரான்ஸ்பாண்டர் வாடகையாக கோலாலம்பூர் ராஜு என்பவர் மூலமாக ரிஸர்வ் வங்கிக்குத் தெரியாமல், அதன் விதிகளை மீறும் வகையில் ஐந்து லட்சம் அமெரிக்க டாலர் செலுத்தப்பட்டிருந்தது. ஜெ. ஜெ. தொலைக்காட்சியின் இயக்குனரான சசிகலா மீது ஃபெரா சட்டம் 8(1)ன்படி வழக்குப் பதிவுசெய்யப்பட்டிருக்கிறது. இதே வழக்கில் அக்காள் மகன்கள் சுதாகரனும், பாஸ்கரனும் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறார்கள்.
- செய்யாறு இந்தியன் வங்கியில் வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்களுக்கான வங்கிக் கணக்கை சுசீலா என்பவர் பெயரில் துவங்கி, அதில் மூன்று லட்சம் மலேசிய டாலர்களை டெபாஸிட் செய்து, பின்னர் சிறிது காலத்தில் சசிகலா குடும்ப நிறுவனங்கள் அந்த டெபாஸிட்டின் பேரில் கடன் வாங்கிக் கொண்டது. இது டாலரை, வெள்ளைப் பணமாக மாற்றும் விவகாரம்.
- மாஸ்கோவைச் சேர்ந்த இண்டர் ஸ்புட்னிக் என்ற ஒளிபரப்பு நிறுவனத்திற்கு ரிஸர்வ் வங்கிக்குத் தெரியாமல் 6,15,160 சிங்கப்பூர் டாலர் கைமாறிய விவகாரம்.



# தோழிகள் மேலுள்ள வழக்குகள்!

- சம்மன்களுக்கு மேல் சம்மன் அனுப்பியும் அமலாக்கப் பிரிவில் ஆஜராகாமல் இருந்ததற்கான வழக்கு.
- அக்காள் மகன் தினகரன் வெளிநாட்டில் 65 கோடி ரூபாய் முதலீடு செய்துள்ளதைப் பற்றிய வழக்கு.

சசிகலாவும், தினகரனும்

திருமணத்தைக் கோலாகலமாக நடத்த வில்லை."

"நல்லது; மதுராந்தகத்தேவர் இப்போது கோட்டைக்குள்ளேதானே இருக்கிறார்?"

"கோட்டைக்குள்ளேதான் இருக்க வேண்டும். ஆனால் மதுராந்தகத் தேவர் சாதாரணமாக வெளியில் வருவதில்லை. மக்கள் அவரைப் பார்க்க முடிகிறதும் இல்லை. சிவபக்தியில் ஈடுபட்டுப் பெரும் பாலும் யோகத்திலும் தியானத்திலும் பூஜையிலும் காலங் கழிப்பதாகக் கேள்வி."

"ஆனாலும் இத்தனை நாளைக்குப் பிறகு கலியாணம் செய்து கொண்டிருக் கிறாரே?"

"ஆமாம்; அது கொஞ்சம் வியப்பான காரியந்தான். கலியாணத்துக்குப் பிறகு மாப்பிள்ளைத் தேவரின் மனமே மாறிப் போயிருப்பதாயும் சொல்கிறார்கள். நமக் கென்ன அதைப் பற்றி? பெரிய இடத்துப் பேச்சுப் பேசாமலிருப்பதே நல்லது..."

சேந்தன் அமுதனிடம் இன்னும் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளும் ஆவல் வந்தியத் தேவனுக்கு இருந்தது. ஆனால் அதிகமாக ஏதேனும் கேட்டுச் சந்தேகத்தைக் கிளப்பி விட அவன் விரும்பவில்லை. இத்தகைய சாதுப்பிள்ளையின் சிநேகம் தனக்குப் பேருதவியாயிருக்கும். தஞ்சையில் தங்க இம்மாதிரி ஒரு வீடு அகப்பட்டதும் தன்னுடைய அதிர்ஷ்டந்தான். அதை யெல்லாம் கெடுத்துக் கொள்வானேன்? மேலும், நீண்ட பிரயாணக் களைப்புடன் முதல்நாள் இரவு கண் விழித்ததும் சேர்ந்து கொண்டது. கண்ணைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. சேந்தன் அமுதன் அவனுடைய நிலையை அறிந்து விரைவில் படுக்கை போட்டுக் கொடுத் தான்.

தூக்க மயக்கத்தில் கடைசியாக வந்தி யத்தேவனுடைய மனத்தில் பழுவூர் இளையராணியின் திருமுகம் வந்தது. அப்பப்பா! என்ன அழகு! என்ன ஜொலிப்பு! அந்த மாயமோகன வடிவத் தைத் திடீரென்று அவன் பார்த்ததும் அடியோடு செயல் இழந்து கண் கொட் டாமல் திகைத்து நின்றது இன்னொரு அனுபவத்தை அவனுக்கு நினைவூட் டியது. சிறுபிராயத்தில் ஒரு சமயம் காட்டு வழியாய்ப் போய்க் கொண்டிருக்கையில் திடீரென்று படமெடுத்து ஆடிய பாம்பு ஒன்று அவன் முன் எதிர்ப்பட்டது. அதன் அழகே அழகு! கவர்ச்சியே கவர்ச்சி! வந்தியத்தேவனால் பாம்பின் படத்தி லிருந்து கண்ணை அகற்றவே முடிய வில்லை. கண் கொட்டவும் முடிய வில்லை. பார்த்தது பார்த்தபடி நின்றான். பாம்பும் ஆடிக் கொண்டேயிருந்தது! பாம்பு ஆடிய போது அதற்கிணங்க, இவன் உடம்பும் ஆடியது – இதன் முடிவு என்ன ஆகியிருக்குமோ தெரியாது. திடீ ரென்று ஒரு கீரிப்பிள்ளை வந்து பாம்பின் மீது பாய்ந்தது. இரண்டும் துவந்த யுத்தம் தொடங்கின. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வந்தியத்தேவன் ஒரே ஓட்டமாக ஓடி வந்து விட்டான்!....

சீச்சீ! என்ன உதாரணம்! இந்தப் புவன மோகினியான சுந்தராங்கியைப் பட மெடுத்த பாம்புக்கா ஒப்பிடுவது? இவளு டைய பால்வடியும் முகத்தை ஒரு தடவை பார்த்தாலும் பசி தீர்ந்து விடுமே?... நாளைக்கு அவளை மறுபடி காணப் போகிறோமல்லவா! அவளுடைய குரலி லேதான் என்ன மதுரம்! இவள் ஒரு அபூர்வமான அழகிதான். ஆனால் குடந்தை சோதிடர் வீட்டிலும் அரிசிலாற் றங்கரையிலும் பார்த்த அந்த இன்னொரு பெண்?.... அவளுடைய முகத்திலும் காந்தி ஒளி விட்டது! அழகு சுடர் விட்டது!... இரண்டு முகங்களும் சுந்தர முகங்களா யினும் அவற்றுக்குள் எத்தனை வேற் றுமை! அதில் கம்பீரமும் பெருந்தன் மையும்; இதில் மோகனமும் கவர்ச்சியும்!... இப்படி அவன் உள்ளம் அந்த இரு மங்கையரின் முகங்களையும் ஒப்பிட்டுக் கொண்டிருந்தபோது, மற்றொரு மங்கை வந்து குறுக்கிட்டாள். சர்வாதிகாரக் கொடுங்கோல் அரசியான நித்திராதேவி வந்தியத்தேவனைப் பரிபூரணமாக ஆட்கொண்டாள்.

(தொடரும்)



# ஸ்வப்ன லோகம்!

கல்கி கலெக்ஷன்

"கொண்டு வா கல்லுளியை!" இவ்வாறு இராஜ ஆக்ஞை பிறந்ததும் ஓடினார்கள் சேவகர்கள். பின்னால் வண்டியில் கல் தச்சர்கள் தங்களுடைய ஆயுதங்களுடனே வந்து கொண்டிருந்தனர். அவர்களிடம் ஓடிச் சேவகர்கள் இராஜ ஆக்ஞையைத் தெரிவித்தனர்.

இராஜாவின் குதூகலத்தைச் சொல்ல முடியாது. பக்கத்திலிருந்த மந்திரியைக் கட்டிக் கொண்டார். "மந்திரி என்னுடைய ஜீவிய மனோரதம் நிறைவேறும் காலம் வந்து விட்டது!" என்று கூவினார். "ஆஹா! எப்பேர்ப்பட்ட குன்றுகள்! எப்பேர்ப்பட்ட பாறைகள்!" என்று உள்ளம் பூரித்தார். பாறைகளைக் கையில் தடவித் தடவிப் பார்த்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டார்.

இதற்குள் கல்தச்சர்கள் தங்கள் தங்கள் ஆயுதங்கள் சகிதமாக வந்து சேர்ந்தார்கள். இராஜா எதிர்கொண்டு ஓடி அவர்களுடைய தலைவனை ஆலிங்கனம் செய்து கொண்டார். பிறகு அவர்களை நோக்கிச் சொல்கிறார் : "தோழர்களே! கேளுங்கள். நமது பிரயாணம் இன்றுடன் முடிவடைந்தது. நாம் இத்தனை காலமும் எதைத் தேடி அலைந்தோமோ அதைப் பரமேசுவரனின் அருளினால் இன்று அடைந்தோம். வடதேசத்திலே என் இளம் பிராயத்தில் நான் பிரயாணம் செய்தபோது அற்புதமான சிற்பங்களையும், கோவில்களையும் பார்த்தபோதெல்லாம் என் உள்ளம் தாபத்தினால் பொங்கிக் கொண்டிருந்தது. நமது தக்ஷிண தேசத்திலே இத்தகைய அற்புதங்கள் இல்லையே என்று ஏங்கினேன். அன்று முதல் இன்று வரை கனவிலும் நினைவிலும் இதுவே எண்ணமாயிருந்தேன். இந்தப் பெரிய காஞ்சி ராஜ்யத்துக்கு நான் அரசனாக விரும்பியதெல்லாம் என்னுடைய இந்த மனோரதத்தை நிறைவேற்றலாம் என்னும் ஆசையுடனேதான்."

"சென்ற ஆறு மாதகாலமாக நாம் இந்த இராஜ்யம் முழுவதும் சுற்றிக்கொண்டு வந்து கடைசியாக நமது கருத்திற்கிசைந்த இவ்விடத்தைக் கண்டுபிடித்தோம். பாருங்கள், எங்கே நோக்கினாலும் சிறு சிறு பாறைகளும் குன்றுகளுமே தென்படுகின்றன. ஆஹா! இவைகளில் எவ்வளவு கோவில்கள் அமைக்கலாம்! எவ்வளவு சிற்பங்கள் செதுக்கலாம்! எவ்வளவு கதைகளைச் சித்திரிக்கலாம்! இதுகாறும் நம்முடைய சொப்பனத்திலே இருந்துவந்த சித்திரலோகத்தை இங்கே நாம் அமைத்து விடுவோம். அதோ நீலக்கடல் தெரிகிறது. பாருங்கள். எங்கெங்கும் வெண்மணல் கூட்டங்களைப் பாருங்கள். அடடா! எப்பேர்ப்பட்ட இடம்! நம் குலதெய்வமாகிய துர்க்கேசுவரியைத் தியானித்து விட்டு இன்றே வேலை தொடங்குவோம்."

இவ்வாறு கூறி அரசன் சிற்பிகள் தலைவனிடமிருந்து ஒரு கல்லுளியை வாங்கி அருகிலிருந்த பாறையைச் செதுக்கத் தொடங்கினான். உடனே, நேற்றுவரை நிர்மானுஷ்யமாயிருந்த அந்த வனாந்தரப்

அமரர் கல்கி

பிரதேசத்தில் நூற்றுக்கணக்கான கல்லுளி களின் டிங், டிங், டக், டக் சத்தம் கிளம்ப லாயிற்று.

இராஜாவுக்கும், சிற்பிகளுக்கும், மற்று முள்ள பரிவாரங்களுக்கும் கூடாரங்கள் அடிக்கப்பட்டன. பண்டகசாலைகள், போஜனசாலைகள் எல்லாம் அமைக்கப் பட்டன.

நாட்கள், மாதங்கள், வருஷங்கள் ஆயின. கடற்கரையிலே காட்டுப் பிரதேசத் திலே ஒரு ஸ்வப்னலோகம் சிருஷ்டிக்கப் பட்டு வந்தது. உயிரற்ற கற்பாறைகள் மொட்டை மொட்டையாக நின்று கொண் டிருந்த இடத்திலே பிரம்மாண்டமான யானைகள், கம்பீரமான சிம்மங்கள், ரிஷ பங்கள், மான்கள், குரங்குகள் அவ்வளவும் உயிருள்ளவை போலத் தோற்றமளிக்க லாயின. அழகிய ரதங்களும் கோயில்களும் ஆங்காங்கு கிளம்பி நின்றன. சிவபெரு மான் துர்க்காதேவி, விக்னேசுவரன், க்ஷீராப்திசயனன், கண்ணபிரான், கோபி மார், மற்றுமுள்ள தேவர்கள், கந்தர்வர்கள், முனிவர்கள் எங்கெங்கும் காட்சியளிக்கத் தொடங்கினார்கள்.

ஒருநாள் காஞ்சிபுரத்திலிருந்து அரசன் மாமல்லனுக்கு அவசரச் செய்தி வந்தது. பாண்டிய அரசனுடன் நிகழ்ந்த யுத்தத் திலே பல்லவ சைன்யங்கள் தோல்வி அடைந்தனவென்றும், பாண்டிய சைன்யம் முன்னேறி வருவதாகவும் அரசன் உடனே தலைநகரத்துக்கு வந்து சேராவிடில் பெரும் விபத்து நேரிடலாமென்றும் மந்திரி செய்தி அனுப்பியிருந்தான்.

அரசன் சிற்பிகளை அழைத்து, வேலை யைத் தொடர்ந்து நடத்தும்படி ஆக் ஞாபித்து விட்டு, அவர்களைப் பிரிய முடி யாமல் பிரிந்து காஞ்சீபுரம் சென்றான்.

சில மாதங்களுக்குப் பிறகு, அங்கு வேலை செய்துகொண்டிருந்த கல்தச்சர் களுக்கு உணவுப் பொருள்கள் வருவது நின்று போயிற்று. சிற்பிகள் பெருங் கவலை யில் ஆழ்ந்தார்கள். சிற்பிகளின் தலைவன் காஞ்சிபுரத்துக்கு ஆள் அனுப்பி விஷயம் என்னவென்று விசாரித்து வரச் சொன் னான். போனவன் திரும்பி வந்து மாமல்ல ராஜா யுத்தத்தில் காயம்பட்டுக் காலஞ் சென்றாரென்றும், பிள்ளைப் பிராயமுடைய அவருடைய மூத்த புதல்வருக்குப் பட்டங் கட்டி முதன் மந்திரியே இராஜ்யபாரம் செலுத்துகிறாரென்றும் செய்தி தெரிவித் தான். மந்திரியிடம், "சிற்பிகளுக்கு உணவுப் பொருள்கள் வந்து சேரவில்லை" என்று தெரிவித்தபோது, "சிற்பமாவது, கண்டைக் காயாவது! எல்லாம் போதும். அவரவர் களையும் போய் வேறு உபயோகமான வேலை செய்து பிழைக்கச் சொல்லு" என்று மந்திரி கூறிவிட்டதாய்ப் போய்வந்த வன் அறிவித்தான்.

சிற்பிகள் வேறு வழியின்றி, அந்த ஸ்வப்ன லோகத்தை அப்படியே பூர்த்தி செய்யாமல் விட்டு விட்டுச் சென்றனர்.

அன்று சிற்பிகளைப் பிரிய முடியாமல் பிரிந்து சென்ற இராஜா வீராவேசத்தோடு போர் புரிந்து பாண்டிய சைன்யத்தை முறி யடித்தார். ஆனால், அந்த யுத்தத்தில் அவ ருக்குப் படுகாயம் ஏற்பட்டது. உயிர் போகும் தறுவாயில் அவர் தம் மந்திரியைக் கூப்பிட்டு, "மந்திரி நான் போகிறேன். ஆனால் என் பெயர் இவ்வுலகில் என் றென்றும் நிலைத்து விளங்கும்படி நான் சிருஷ்டித்த ஸ்வப்ன லோகத்தை என் பெயரால் 'மாமல்லபுரம்' என்று அழைப் பீர்களாக" என்று கூறினார்.

ஆனால் மனிதனுடைய அற்ப ஆசை களும் நம்பிக்கைகளும் எவ்வளவு துச்ச மானவை! 'மாமல்லபுரம்' என்பது 'மகாமல்லபுரம்', 'மகாமலிபுரம்' என்றெல் லாம் மருவிக் கடைசியில் **'மகாபலிபுரம்'** என்று ஆகிவிட்டது. அரும்பாடுபட்டுத் தன்னைச் சிருஷ்டித்த மகா ரஸிகனான மாமல்லனுடைய பெயர் தாங்கி விளங்கு வதற்குப் பதிலாக, யாரோ புராணக் கதை யில் வரும் ஓர் அசுர ராஜன் பெயரால் அது இன்று அழைக்கப்படுகிறது!

(மேற்கூறிய சரித்திர வரலாற்றுக்கு ஆதாரங்கள் தெரிந்துகொள்ள விரும்பு வோர் மிஸ்டர் ஏ.எச். லாங்க் ஹர்ஸ்ட், புரொபசர் ஜோவோ டுப்ரீல், டாக்டர் எஸ். கிருஷ்ணசுவாமி அய்யங்கார், ராவ்பகதூர் எச். கிருஷ்ண சாஸ்திரி, ஸ்ரீமான் ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார், ஸ்ரீமான் டி.ஜி. ஆராவமுதன் முதலிய ஆராய்ச்சிக் களஞ் சியங்களின் பிரசித்தி பெற்ற நூல்களைப் பார்க்க வேண்டாம். ஏனெனில், இந்தப் புத்தகங்கள் எவற்றிலும் அவ்வரலாற்றுக்கு அணுவளவும் ஆதாரம் கிடையாது.)

நன்றி: **ஆனந்த விகடன்** ***(5.8.34)***



# “மகேந்திரனுக்கு நான் தேவைப்பட்டேனே தவிர, எனக்கு அவர் தேவைப்பட்டதில்லை!”

**— பாலு மகேந்திரா**

***சமீபத்திய பேட்டி ஒன்றில், இயக்குனர் மகேந்திரன், தமது ‘முள்ளும் மலரும்’ படத்தின் ஒளிப்பதிவாளராகப் பணியாற்றிய பாலு மகேந்திரா பற்றிக் குறை கூறியிருந்தார். அதைப் பற்றி பாலு மகேந்திராவிடம் கேட்டபோது முதலில், “முள்ளும் மலரும் படத்தில் எனது பங்களிப்பு பற்றி மகேந்திரன் வருத்தப்பட்டிருந்ததைப் பற்றி அபிப்பிராயம் சொல்வதைத் தவிர்க்கவே நினைக்கிறேன்!” என்றார். இருப்பினும் தொடர்ந்து நடந்த சந்திப்பில் சில கேள்விகளும் அதற்கு பாலு மகேந்திரா அளித்த பதில்களும்...***

“‘முள்ளும் மலரும்’ படத்தில் உங்களை ஒளிப்பதிவாளராகப் போட்டது கமல் சிபாரிசால்தான் என்று மகேந்திரன் தமது பேட்டியில் சொல்லியிருக்கிறாரே?”

“எனக்காகப் பரிந்துரையுங்கள் என்று கமலையோ வேறு எவரையோ நான் இதுவரை கேட்டவனல்லன். எனது ஒளிப்பதிவிலும், எனது இயக்கத்திலும் கமல் பணியாற்றியதால், கமலுக்கு எனது சினிமா மீடியா ஆளுமை என்ன என்பது நன்றாகத் தெரியும். ‘சதிலீலாவதி’ படம் கூட அவர் அழைத்துக் கொடுத்ததுதான்; நான் கேட்கவில்லை. நண்பர் மகேந்திரன் நாடகங்களுக்குக் கதை வசனம் எழுதிக் கொண்டிருந்தவர். அவர் எழுதிய மேடை நாடகம் ஒன்று சினிமாவாகச் செய்யப்பட, அந்தப் படத்தின் வசனகர்த்தாவாக அவரது சினிமாப் பிரவேசம் நிகழ்ந்

தது. 'முள்ளும் மலரும்' மகேந்திரன் எழுதி இயக்கிய முதற்படம். அதன் கதை வேறு ஒருத்தருடையது. பிரசுரமாகிப் பரிசும் வாங்கியது. நாடகத்திலிருந்து சினிமாவுக்கு வந்தவர் என்பதால், தாம் இயக்கும் முதற் படத்திற்கு சினிமா மீடியா ஆளுமையுள்ள (ஒரு கதையை விஷுவலாகச் சொல்லத் தெரிந்த) ஓர் ஒளிப்பதிவாளரின் உதவி மகேந்திரனுக்குத் தேவைப்பட்டிருக்கிறது. அவரோடு வேலை செய்ய ஆரம்பித்ததுமே இது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது. என் சினிமா மீடியா ஆளுமை என்ன என்பதைக் கமல் நன்கு அறிந்தவர் என்பதால் மகேந்திரனுக்குச் செய்யும் உதவியாகக் கமல் என்னை அவருக்குச் சிபாரிசு செய்திருக்க வேண்டும். மகேந்திரனுக்கு நான் தேவைப்



**"கண்ணே! காதலுக்குக் கண் இல்லை என்கிறார்களே, உண்மையா?"**

**"ஆமா; பின்னால் என் அப்பா நிற்பதைக் கூட நீங்க இன்னும் பார்க்கலியே!"**

**— வெ. ராஜாராமன்**

பட்டேனே தவிர, எனக்கு மகேந்திரன் எக்காலத்திலும் தேவைப்பட்டதில்லை."

**"ராமன் அப்துல்லாவிற்குப் பின் இப்படியொரு இடைவெளிக்குக் காரணம்?"**

"ஒரு படத்தின் வேலைகள் நடந்து கொண்டிருக்கும் பொழுதே அடுத்த படத்தை கமிட் செய்து அட்வான்ஸ் வாங்கிக் கொள்ளும் வழக்கத்தை நான் வைத்துக் கொள்ளாதது ஒரு காரணமாக இருக்கலாம்; செய்து கொண்டிருக்கும் படத்தை முடித்து, ரிலீஸ் செய்தபின்தான் அடுத்த படத்திற்கான கதை அமைப்பிற்கென நான் உட்காருவது என்ற உறுதியும் ஒரு காரணமாக இருக்கலாம். கதை, திரைக்கதை, உரையாடல், ஒளிப்பதிவு, படத்தொகுப்பு, இயக்கம், ஸ்டில்ஸ்... இப்படிப் பல பொறுப்புகளைச் சுமந்து கொள்ளும் நான், ஒரு படம் முடிந்ததும் என்னைச் சற்று ஆசுவாசப் படுத்திக் கொள்ள எடுத்துக் கொள்ளும் கால அவகாசமும் ஒரு காரணமாக இருக்கலாம். படத்திற்கான திரைக்கதை, வசனம் முழுவதையும் எழுதி முடித்து, டைப் செய்து, பைண்டு பண்ணிக் கையில் எடுத்த பின்னரே படப்பிடிப்பிற்குச் செல்வது என்ற எனது பிடிவாதம் கூட ஒரு காரணமாக இருக்கலாம். இப்படிப் பல காரணங்கள். ஒரு படத்திற்கும் இன்னுமொரு படத்திற்கு மிடையே இரண்டு வருடங்கள் கூட இடைவெளி இருந்தது உண்டு."

**"பிரபு நடிக்க, நீங்கள் இயக்குவதாக இருந்த பிரமிட் நடராஜனின் படம் கைவிடப்பட்டதன் நிஜம் என்ன?"**

"கைவிடப்பட்ட படத்தைப் பற்றிப் பேசி ஏன் வாசகர்களை போர் அடிக்க வேண்டும்? நடக்க இருக்கும் விஷயங்கள் பற்றிப் பேசலாமே... பிரமிட் நடராஜன் எனது சினிமாவை நெஞ்சார நேசிப்பவர். என் மீது மிகுந்த அக்கறை கொண்டவர். கண்டிப்பாக அவரும் நானும் இணைந்து ஒரு படம் செய்வோம். இருபது வருடங்களுக்கு முன்பே தமக்கு ஒரு படம் செய்து தரும்படி நடராஜன் என்னைக் கேட்டிருந்தார். வேளை வரவில்லை போலும். தள்ளிக் கொண்டே போகிறது. 'அடுத்து முயன்றாலும் ஆகும் நாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா' என்றொரு நியதி உண்டல்லவா?"

**"நீங்கள் சினிமாவை விட்டு விலகி தொலைக் காட்சிப் பக்கம் கவனம் செலுத்தப் போவதாக ஒரு செய்தி அடிபடுகிறதே?"**

"சினிமாவை விட்டு விலகி என்றல்ல – இதுவரை சின்னத்திரை பக்கம் தலை வைத்துப் படுக்காத நான், இனி அதிலும் சீரியஸ் ஆகக் கவனம் செலுத்தலாம் என எண்ணியுள்ளேன். வியாபார சினிமாவின் தேவைகள் என்னைச் சலிப்படையச் செய்கின்றன. சின்னத்திரையில் நிறைய நல்ல விஷயங்கள் செய்யலாம்."

**"தொலைக்காட்சித் தொடர்கள் பொதுவாக வழவழா கொழகொழா என்று இருக்கின்றனவே?"**

"சுஹாசினியின் 'பெண்' தொடர் போன்ற சிறப்பான விஷயங்களும் அவ்வப்போது வரத்தானே செய்கின்றன? அரசுத் தொலைக்காட்சி குறிப்பிட்ட சிலருக்கு மட்டுமே என்று ஆகிவிட்டது. அற்புதமான பதின்மூன்று சிறுகதைகளைத் தேர்ந்தெடுத்து

தூர்தர்ஷனிடம் அனுமதி கேட்டிருந்தேன். மறுத்துவிட்டார்கள். இரண்டாயிரம் ரூபாய் கட்டி மறுபரிசீலனை செய்யுங்கள் என்று கேட்ட பின்பே அனுமதி கிடைத்தது. ஆனால், இன்னும் ஸ்க்ரீன் சிக்னல் தரப்பட வில்லை. மூன்று வருடங்களாகக் காத்திருக்கிறேன்."

"இளையராஜா தயாரிக்க, நீங்கள் ஒரு படத்தை இயக்கப் போவதாகவும் பேசப்படுகிறதே?"

"உண்மைதான். இது விஷயமாக ராஜா என்னுடன் பேசியுள்ளார். சரியான சூழ்நிலை உருவாகும் பொழுது இது நிச்சயம் நடக்கும்."



"கண்ணே, உன் அப்பா நம் கல்யாணத்துக்குச் சம்மதிப்பாரா?"

"பாதி சம்மதிச்சுட்டார்...!"

"என்ன சொல்றே?"

"என் கல்யாணம் நடக்கணும்கிற அளவுக்கு உறுதியா இருக்கார்; மாப்பிள்ளை நீங்கதானா என்பதைத்தான் இன்னும் முடிவு பண்ணலே!"

— வெ. ராஜாராமன்

"படைப்பாளிகள் பக்கமிருந்து ஒதுங்கி யிருப்பது போன்ற ஒரு தோற்றம் தற்போது தங்களுக்கு... இது நிஜமா?"

"என்னை மையமாக வைத்து ஆரம்பிக்கப்பட்ட அமைப்பு இது. படைப்பாளிகள், தொழிலாளர்கள் கூட்டமைப்பின் உபதலைவராகவும் தமிழ்நாடு திரைப்பட இயக்குனர்கள் சங்கத்தின் செயலாளராகவும், எங்கள் கூட்டமைப்பிற்கு உறுதுணையாக இருக்கும் தென்னிந்திய சினிமா ஒளிப்பதிவாளர் சங்கத்தின் உபதலைவராகவும் நான் பணியாற்றி வருகிறேன். ஒதுங்கி நிற்பதென்பது என் உயிர் உள்ளவரை நடக்காது!"

"இயக்கம் - ஒளிப்பதிவுத் துறைகளில், பல வருடங்களாக உங்கள் சாதனைகள் தடங்களாகப் பதிந்து இன்றும் தொடர்கின்றன. இருப்பினும் காலமாற்றத்திற்கேற்ப, தொழில் நுட்ப மாற்றங்களுக்கு கேற்ப நீங்கள் இன்னும் உங்கள் பிரத்யேக பாணியை மாற்றிக் கொள்ளவில்லை என்று ஒரு கருத்து நிலவுகிறதே?"

"எனது பிரத்தியேகப் பாணி என்று பிரக்ஞை பூர்வமாக நான் எதையும் வகுத்துக் கொண்டதில்லை. கதையின் தேவையையும், கதாபாத்திரங்களின் தன்மையையும் மனத்தில் கொண்டே எனது படங்களின் ஒளிப்பதிவு, படத்தொகுப்பு, நடிப்பு, இசையமைப்பு, போன்ற விஷயங்களை நான் தீர்மானிக்கிறேன். இது ஒரு வேளை உங்களுக்கு பாலு மகேந்திரா பாணி என்று படுகிறதோ என்னவோ... கதையின் தேவைக்குப் புறம்பாக நான் எதையும் செய்வதில்லை. ஒரு படத்தோடு சம்பந்தப்பட்ட எதுவுமே தேவையின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்டு இயங்கக் கூடாது. தனியாக நின்று பார்வையாளனைத் தன்வசப்படுத்தக் கூடாது என்பது என் கொள்கை."

"உங்களின் அடுத்த முயற்சி என்ன?"

"பதின் வயசுகளின் முதற்காதலை மையமாக வைத்து ஒரு படம் செய்ய இருக்கிறேன். பையனும் பெண்ணும் இதுவரை திரையில் தோன்றாத புதுமுகங்களாக இருப்பார்கள். பையனைப் பிடித்து விட்டேன். பெண்ணைத் தேடிக் கொண்டிருக்கிறேன். பதினைந்து பதினாறு வயசுள்ள, அல்லது அப்படித் தோற்றமுள்ள ஒரு பெண்ணைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன். இசை, வழக்கம் போல எனது இளையராஜா."

சந்திப்பு : ரெவித்தம்பி

"அந்த கிளினிக்கில் நோயாளிகளுக்கு ஏதோ பெரிய சலுகை காட்டறதா சொல்றியே, என்னது?"

"தலைவலி, சளி, இருமல், ஜுரம் ஆகிய வியாதிகளுக்கு ஆபரேஷன் இல்லாமல் ட்ரீட்மெண்ட் அளிக்கப்படும்னு போர்டு போட்டிருக்கான், பாரேன்!"

— வெ. ராஜாராமன்





# இன்று வாழலாம்

எல்லாவற்றிற்கும் குட்பை! விரைவில் வீடு திரும்ப வேண்டும். குப்தா என்னும் புயல் இந்நேரம் எங்கே மையமிட்டிருக்கிறதோ... ஜீவா கிளம்புவதற்கு முன் ஹோட்டல் நிர்வாகி மேரியைச் சந்தித்தான்.

நட்புடன் கை குலுக்கி "சாரி மேடம்!" என்றான். மேரியைச் சந்தேகித்ததற்காக வெட்கினான்.

"ஜீவா! உங்கள் 'சந்தேகங்கள்' யாவும் தீர்ந்ததா?" வெள்ளையாகச் சிரித்தாள்.

பெருமிதமுடன் கவனித்தான். மேரிக்கும், குப்தாவுக்கும் எவ்வளவு வேறுபாடு! நாட்டுப் பற்றுள்ள மேரிகள் இருக்கும் வரை இந்தியாவை எவரும் எதுவும் செய்ய முடியாது. மகனுக்கு ஒரு பரிசுப் பொருளும் தந்து வழி அனுப்பினாள்.

மாலை 4:00. யோசனையுடன் காரைச் செலுத்தினான் ஜீவா. சிசர் கொலை, பிற மிரட்டல்கள் யாவும் குப்தாவின் திருவிளையாடல் என்பது தற்போது புரிந்தது. முதலில் தன்னைப் பணிய வைக்க முயற்சித்திருக்கிறான். பின், பணத்தால் அடித்துக் காரியம் சாதிக்க நினைத்திருப்பான். இந்திய உளவுத் துறை மட்டும் குறுக்கிடாவிட்டால், டாக்டர் ஜலாலை 'எப்படியாவது' முன்னரே முடித்திருப்பான்!

திருச்சி. இரவு 7:00. களைப்பாக உணர்ந்தான். ஒரு லாட்ஜில் 'வேறொரு பெயரில்' அறை எடுத்தான். நடுநிசிக்கு மேல் கிளம்ப உத்தேசித்திருந்தான்.

படுக்கையில் சாய்ந்த பத்தாவது நிமிடம், போன் ஒலித்தது! யாராக இருக்கும்? சற்றே வியப்புடன் எடுத்தான். "ஹலோ..." என்றான்.

"ஜீவா... ஜீவா!"

ஷீலா! ஏன் அவள் குரல் பதறுகிறது?

"சொல்லும்மா!" எப்படி இந்த ஹோட்டலைப் பிடித்தாள்...!

பதிலாக, விம்மல் வெடித்தது. கடவுளே, என்ன நிகழ்ந்து விட்டது அங்கே...

"நம் மகனை.. மகனை... கௌதமை..."

"கௌதமை?" என்றான் தாடை இறுக.

"கடத்திக் கொண்டு போய் விட்டார்கள்!"

ஜீவாவிடம் மகா மௌனம். அவன் நினைவில் சில வினாடிகள் அல்லது யுகங்கள் கடந்த போது—

"ஜீவா!" என்று அலறினாள். "லைனில் இருக்கிறீர்கள்தானே?"

"மேலே சொல் ஷீலா."

"ஒருவன்— மிகவும் தடியனாக இருந்தான்— போலீஸ் உடுப்பில் வந்து கதவைத் தட்டி கௌதமை..." அவள் முடிக்க முடியாமல் திணறினாள்.

பத்மா ரவிசங்கர்

11

"ஆல்ரைட். அப்புறம்...?"

"அவன் பெயர் தாஸ் என்றான்...."

தாஸ்! குப்தாவுடன் எக்மோர் லாட்ஜில் சந்தித்த ஞாபகம் வந்தது. அவன் உதவியாளனாக. ஸ்பெயின் தேசப் பொலி காளை போல.

"ஏதாவது சொன்னானா?"

"ஊம். நீங்கள் உடனே சென்னைக்குக் கிளம்ப வேண்டுமாம். நம் வீட்டை அடைந்ததும், காலை குப்தா என்பவன் போன் செய்வானாம். அடுத்து நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்றும் சொல்வானாம். இன்னொன்றும்... சொன்னான்! அது..."

"சொல் ஷீலா."

"நீங்கள் தவறாக ஒரு 'ஸ்டெப்' வைத்தாலும் அவன் உடனே நம் மகனை... மகனை..." அவள் விசும்பினாள்.

"புரிகிறது ஷீலா!" என்றான் மென்மையாக. "எப்போது தாஸ் தடியன் வந்து கடத்தினான்?"

வா!

"மாலை ஐந்து, ஐந்தரை இருக்கும்."

"எப்படி என்னைப் போனில் பிடித்தாய்?"

"சற்று முன்னர்தான் போனில் உங்கள் திருச்சி ஹோட்டல் எண்ணைத் தெரிவித்தான்!"

"யார்? தாஸா?"

"ஊம்! எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது ஜீவா..." என்றாள் விம்மலிலிருந்து விடுபடாமல்.

ஜீவா நம்பிக்கை தரும் குரலில், "பயப்படாதே ஷீலு! குப்தா எங்கே இருக்கிறான் என்று எனக்குத் தெரியும்!" என்று தயங்காமல் பொய் சொன்னான். "கவலையை விடு. மகனை மீட்கும் வழி எனக்குத் தெரியும்! காலை அங்கு வந்து விடுவேன். எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்!"

ஆனால், மகன் மீட்பு எப்படி என்று தெரியாமல் விழித்தான். கௌதமுக்கு ஏதும் ஆகி விட்டால்... மனைவியின் கதி... சிதறும் குடும்பம்... பதறாதே ஜீவா! அம்மாதிரி யோசிக்காதே.

குப்தா எதற்கும் துணிந்தவன். கூசாமல் எவரையும் கொல்வான். ஆனால் உடனே செய்ய மாட்டான். காரியம் முடியும் வரை காத்திருப்பான். கௌதம், அவனுக்குத் துருப்புச் சீட்டு! சரி. என்ன அவன் காரியம்? தன்னிடம் என்ன



எதிர்பார்க்கிறான்?

மகனின் விடுதலைக்கு விலையாக டாக்டர் ஜலாலைக் கொன்று விட்டு வா என்பான்! அந்த கம்ப்யூட்டர் மேதை, இந்தியாவின் பெருமிதம். அது மட்டுமா? குடும்பத்தின் உற்ற நண்பர். நட்பு! அது தானே குப்தாவின் குரூரக் கணக்கு.. நண்பன் என்பதால் பாதுகாப்பைச் சுலப மாக அத்து மீறலாம். நம்பும் மனிதரை எப் படிக் கொல்வான்? கொல்லாமல் கௌதம் விடுதலை இல்லை! என்ன ஒரு சிக்கல்...

உடனே விடுவிப்பான் என்ற உத்தர வாதமும் இல்லை. கொலைப் பட்டியலி லிருந்து, ஒவ்வொருவராகக் கொல்லவும் சொல்லலாம்.

இல்லை. குப்தாவை வெல்வதற்கு வேறு ஏதோ வழி இருக்கிறது. அது என்ன? எப்போதும், எதிலும் அடிப்படையிலிருந்து ஆரம்பி ஜீவா. காதில் ஆத்மாவின் குரல்.

முதலில் குப்தா இருக்குமிடம் தெரிந்து கொள்ள வேண்டும். அது எப்படிச் சாத்தி யம்? அவன் ஒரு சாதாரணக் கிரிமினல் இல்லை. மாஜி உளவாளி; மாயாவி! எங்கா வது பதுங்கிக் கொண்டு ரிமோட்டில் செயல்படும் அவனை எப்படிப் பிடிப்பது?

அவனுடன் தொடர்புடைய ஒரு சிறு துரும்பு போதும்! பற்றிக் கொண்டு முன்னேறி விடலாம்!

யோசனையுடன் நடந்தான். காலை மதுரையிலிருந்து நழுவிய குப்தா தற்போது சென்னையில். தான் திருச்சி வந்து அரை மணிதான் ஆகியிருக்கும். ஆனால் இந்த விஷயம் குப்தாவுக்கு உடனடியாகத் தெரிந் திருக்கிறது! எப்படி?

நிழல்! குப்தாவின் ஏற்பாடு! மதுரையி லிருந்தே எவனோ பின் தொடர்ந்திருக் கிறான்! தொலைபேசியில் குப்தாவுக்குத் தகவல் தந்திருக்கிறான். யார் அவன்? அவன்தான் அந்தத் துரும்பு! இந்நேரம் இந்த ஹோட்டலைக் கண்காணித்துக் கொண்டி ருப்பான். அவனைப் பிடித்தால்..

ஹோட்டல் வாசலுக்கு வந்தான். சாலை யில் ஒளிரும் விளக்குகள். விரையும் வாக னங்கள். சுறுசுறுப்பாக மக்கள். இவர்களில் 'அவனும்' ஒருவன்!

யார் அவன்? எப்படி இருப்பான்? எங்கிருந்து கண்காணிப்பு? எப்படிக் கண்டு பிடிப்பது?

சாலையில் இறங்கி நடந்தான். காஷுவல் உலா போல் நடை. பராக்கு

பார்க்கும் கண்கள். ஆனால் உள்ளுக்குள் உச்சபட்ச எச்சரிக்கை.

அங்கே ஆண்களும் பெண்களுமாக எவ்வளவு பேர்கள்! கும்பலில் எப்படி அவனை அடையாளம் காண்பது? . ஜீவா ஆட்டத்தைத் துவக்கினான்.

சட்டென்று சாலையைக் கடந்து எதிர்ப் புறம் வந்தான். உடனடியாகச் சாலையை வேறு எவரும் கடக்கவில்லை. சிறிது தூரம் நடந்ததும், சற்று நேரம் கடந்ததும்—

ஐந்து ஆசாமிகள் ரோடைக் கடப்பதைக் கவனித்தான். இருவர் ஒரு கடைக்குள் நுழைந்தனர். மீதமுள்ள மூவர் அவன் பின்னால்; நெரிசலில் கலந்தபடி; தக்க தூரம் விட்டு... சரி.

குப்தா அமர்த்திய நபர் யார்?

ஒரு போன் பூத்திற்குள் நுழைந்தான். அதன் கண்ணாடிக் கதவு வழியே வெளியே பார்த்தான். மூவரில், இருவர் தாண்டிச் சென்று விட ஒருவன் தொலைவிலேயே நின்று விட்டான்! கண்டேன் நிழலை! அவன் இளைஞன். ஒடிசலான உடல்வாகு. ஊதா நிற சஃபாரியில். அனேகமாக கத்தி அல்லது துப்பாக்கி வைத்திருப்பான்.

ஊதா சஃபாரியிடம் மிக்க தயக்கம்; முகத்தில் குழப்பம். என்ன செய்கிறோம் என்று விளங்காமல் தவிக்கிறான், பாவம். இரண்டு 'ராங் கால்கள்' செய்தான்! சீரியஸான முகத்துடன் போனில் ஏதேதோ உளறினான்!

ஜீவா வெளியே வந்தான். உடன் ஊதாவும் பின் தொடர்ந்தான். பிரதான சாலையிலிருந்து விலகி வீதிகளில் அலைந்தான். கொஞ்ச நேரத்திலேயே, அந்தப் பிரதேசத்தின் Topography பிடிபட்டது; படம் வரைந்து பாகம் குறிக்கும் அளவு!

அவன் தேர்ந்தெடுத்த ஹோட்டல், ஏறக் குறைய அந்த கிளைச் சாலையின் முனையில். அதனுள் சென்றான். சஃபாரி ஆசாமி உள்ளே வரவில்லை. வாசலில் காத்திருப்பான். பருகிய காப்பிக்குப் பேரரிடம் பணம் தந்து விட்டுக் கிளம்பினான். எவரையும் கேட்காமல் ஹோட்டலின் பின்கட்டு வழியாக வெளியேறினான்.

வெளிப்பட்டதும், மற்றொரு சிறிய தெரு நடந்தான். பிறகு, திரும்பினான். பிரதான சாலையில் சிறிது தூரம். அப்புறம்...

ஜீவா நடந்து சென்ற பாதை '[]' வடிவில் இருந்தது. திரும்பவும் ஹோட்டல் வாசல் இருந்த கிளைச் சாலைக்கு வந்திருந்தான்! சஃபாரி ஆசாமி சீரியஸாக உணவகத்தின் வாசலைப் பார்த்திருக்க...

பூனை மாதிரி அணுகியிருந்த ஜீவா அந்த ஆசாமியின் வலக் கையை இறுகப் பற்றினான்!

"நீங்களா?" என்றான் ஏக வியப்புடன்; நம்ப முடியாமல் பார்த்தான்.

"நானேதான்! முரண்டு பிடிக்காமல் வந்தால் உனக்கு நல்லது!" என்ற ஜீவா கையில் கத்தி. "உன் உடம்பில் முதலில் எங்கே கிறலாம்?" என்றவன் கண்களில் சற்றும் உணர்ச்சியில்லை. இவன் தனக்குச் சமதையே இல்லாத 'சாதா'! சில பல காசுகளுக்குக் குற்றம் புரியும் ஒரு சோதா கிரிமினல்!

வெளிப்படையாகவே அவன் மிரண்டது தெரிந்தது. பலி ஆடு மாதிரி வந்தான். பெயர் துரை என்று தெரிந்து கொண்டான்.

தன் அறைக்கு வந்ததும், துப்பாக்கியை உருவிக் கொண்டான் ஜீவா. சில வினாடிகள் உற்றுப் பார்த்தான்.

"மதுரையில் இருந்து என்னைப் பின் தொடர்ந்தாய். திருச்சியில் இந்த ஹோட்டலில் தங்கியதும் சென்னைக்கு டெலிபோனில் தகவல் தந்திருக்கிறாய்! உன்னிடம் ஒரே ஒரு கேள்விதான்! அந்த சென்னை எண் என்ன?"

அவன் பேசாமலே இருந்தான்.

"இங்கே பார் துரை. எனக்கு அவகாசம் அதிகமில்லை. டப்பென்று சுட்டு விடுவேன்! நீ இறப்பதால் இந்த உலகத்திற்கு நஷ்டம் ஏதுமில்லை! ஆனால் உடனடியாகக் கொல்ல மாட்டேன்! முதலில் கால்! அப்புறம் கொஞ்சம் மேலே! அதற்கும் அடுத்த புல்லட்—"

"சொன்னால், குப்தா கொன்று விடு



''என் கணவர் எப்பவும் தனிமையில்தான் கதை எழுதுவாரு!''

''அது சரிதான்! பக்கத்தில் ஒருவரை வச்சுக்கிட்டா காப்பியடிக்க முடியும்!''

— உ. ராஜாஜி



"ஏண்டா ஆபீஸில எல்லார்கிட்டேயும் உன் தாத்தாவுக்கு நாலு பொண்டாட்டி, இன்னொரு தாத்தாவுக்கு மூனு பொண்டாட்டின்னு புளுகி வெச்சிருக்கே?"

"லீவு எடுக்க உதவுமேன்னுதான்!"

– வெ. ராஜாராமன்

வான்!"

"குப்தாவா?" ஜீவாவிடம் குளிருட்டும் சிரிப்பு. "சென்னையிலிருந்து அவனைத் தப்பிக்க விட்டால்தானே?"

சொல்லியவாறே நெருங்கினான். எந்த எச்சரிக்கையும் தராமல் திடுமென்று அவன் தாடையில் தாக்கினான்.

"ஆ..ஆ...!" என்ற அலறலுடன் பின் வாங்கினான் துரை. விழிகளில் பயம். உதட்டோரம் துளிர்த்த ரத்தம். மிகவும் அதிர்ந்திருந்தான். டக்கென்று அந்த சென்னை போன் எண்ணைத் தெரிவித்தான்!

"உண்மைதானே?" என்று ஜீவா முஷ்டியை இறுக்கினான்.

வெடவெடத்த குரலில் அவசரமாக ஆமென்றான்.

"சென்னையில் அந்த எண்ணில் இருப்பது யார்? குப்தாவா?"

"தெரியாது சார். நான் துரை என்பேன். பதிலுக்கு எதிர்முனையில் எவரோ 'கழுகு காத்திருக்கிறது' என்பார்கள். செய்தி சொல்வேன். அவ்வளவுதான் என் தொடர்பு."

"உனக்கு வேறு என்ன உத்தரவு?"

"நீங்கள் திருச்சியிலிருந்து புறப்பட்ட தகவலை அறிவித்ததும் என் வேலை முடிந்து விடும்..."

"ஐசீ. வேறு எவராவது என்னைப் பின் தொடர இருக்கிறார்களா?"

"தெரியாது சார்."

வேறு வால் இருக்காது என்றே தோன்றியது. தல் கார் கிளம்புவதை உறுதிப்படுத்தவே, துரை. குப்தா வசம், கௌதம். ஜீவா சென்னைக்கு வந்துதானே ஆக வேண்டும் என்ற நம்பிக்கையில் இருப்பான்.

"ஆல்ரைட். இப்போது அந்த நம்பருக்குப் போன் செய் துரை!" துப்பாக்கியின் சேஃப்டி காட்ச் விடுவித்தபடியே என்ன சொல்ல வேண்டும் என்றும் தெரிவித்தான்.

தொலைபேசியில் எண் சுழற்றும் துரையைத் துப்பாக்கியால் குறி பார்த்த ஜீவா, "ஒரு வார்த்தை! ஒரே ஒரு வார்த்தை தப்பாகப் பேசினாலும் தொலைந்தாய்! அடுத்த நொடி நீ பிணம்!"

போனில் துரை, "நான் துரை பேசுகிறேன் சார்... ஜீவா சற்று முன்னர்தான் கிளம்பினான்... இங்கே ஏதும் பிரச்னையில்லை சார்!" என்று போனை வைத்தான்.

இது போதும்! எல்லாம் திட்டப்படி என்று குப்தா களிப்புடன் நிம்மதியாக இருப்பான்.

"நல்ல பையன்!" என்று முறுவலித்த ஜீவா "அப்படியே திரும்பு துரை!" என்று உத்தரவிட்டான். திரும்பியவனின் பின் தலையில் துப்பாக்கியின் பின்புறத்தால் நச்சென்று தாக்க...

மயங்கிய துரை, சேரில் கயிற்றால் இறுகப் பிணைக்கப்பட்டிருந்தான்! ஆத்மா கொடுத்த நம்பரை முயற்சித்தான்.

சென்னையில் சற்றும் தாமதமின்றி எடுக்கப்பட்ட ரிசீவர். டக்கென்று வந்த ஆத்மா குரல். மனிதர் ஓய்வே எடுக்க மாட்டார் போலும்! கடத்தல் பற்றிச் சொன்னான். துரை தந்த எண்ணைக் கொடுத்தான்.

"கவலையை விடு ஜீவா. அந்த போன் இருக்கும் முகவரி அறிந்து கொள்கிறேன். கண்காணிக்க நம் ஆட்களை அமர்த்தினால் குப்தா உஷாராகி விடுவான்! எனவே மஃப்டியில் சில சி.ஐ.டி. லோகல் போலீஸார் ஏற்பாடு செய்து விடுகிறேன்!"

"பிறகு, இங்கே திருச்சியில் உள்ள நம் ஏஜண்ட் ஒருவனை அனுப்பி வையுங்கள்."

"எதற்கு ஜீவா?"

"நம் காரியம் முடியும் வரை, துரை என்பவனைத் தொடர்ந்து மயக்கத்தில் வைத்திருக்கவும் பாதுகாப்பாகப் பார்த்துக் கொள்ளவும், தேவை!"

"டன்!" என்றார் உற்சாகமாக.

ஆத்மாவின் சுறுசுறுப்பு! அரை மணியில் வந்த ஏஜண்டிடம் துரை ஒப்படைப்பு. திருப்தியானான்.

ஜீவா காரில் புறப்பட்டான். சென்னையில் அந்த முகவரி கிடைத்து விடும். அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று யோசித்தான். தான் வெற்றியின் அருகே என்று நினைத்தான்.

ஆனால் சென்னையில் குப்தா கடினமான 'கண்டிஷன்' ஒன்று போடக் காத்திருந்தான்...!

(அடுத்த இதழில் முடியும்)

# இந்திய விக்கெட்டுகளைச் சாய்த்து விட்டீர்களே!

✉ "களவாளர்களின் அரசியல் கயவர்கள் கையில்" தலையங்கம் மூலம், மாநில ஆளுநர்கள் சிக்கலான நேரங்களில் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை உ.பி. ஆளுநர் 'பண்டாரி'யை வாங்கு வாங்கென்று வாங்கியதன் மூலம் மிக அருமையாகச் சுட்டிக் காட்டியிருந்தீர்கள்.

கோவை-14, ஏ.எஸ். இராமசாமி.

✉ ஆஸ்திரேலிய அணியின் சூப்பர் ஹீரோ வார்னேவின் பேட்டி சிறப்பாக இருந்தது. இந்தியா-ஆஸ்திரேலிய அணிகளுக்கான போட்டிகளும் அவரின் பேட்டியைப் போல ஆரோக்கியமாகவும், ஆனந்தமாகவுமே இருக்கும். நிச்சயம் கைதட்டக் காத்திருக்கோம்!

மணப்பாறை, து. ஆனந்திராஜன்.

✉ கங்குலி அட்டைப்படம் சூப்பர்! பேட்டியும் தான்! கிரிக்கெட் ரசிகர்களுக்கு இது ஒரு முக்கியமான இதழ்!

சிதம்பரம்-1, ஜி. கண்ணன்.

✉ திடீரென்று 'கிரிக்கெட் ஸ்பெஷல்' எனும் வேகப் பந்தை வீசி எங்கள் இதய விக்கெட்டுகளைச் சாய்த்து விட்டீர்களே...? கங்கிராட்ஸ்!

சேலம்-2, சூர்ய நிலா.

✉ இந்திய அணியில் மருந்துக்குக்கூட ஒரு தமிழர் இல்லை. இந்நிலையில் சிறந்த வீரரான ராபின், அணியில் சேர்த்துக் கொள்ளப்படாதது துரதிர்ஷ்டமே. "சரியான வாய்ப்பும், ஆதரவும் கொடுக்கப்பட்டிருந்தால் ராபின் இந்திய அணிக்கே தலைமைதாங்கக்கூடிய நிலைக்கு உயர்ந்திருப்பார்" என்று முன்பு கபில், கல்கிக்கு அளித்த பேட்டியில் கூறியிருந்தது ஞாபகத்துக்கு வந்தது!

தூத்துக்குடி-1, ப. சுகுமார்.

✉ போட்டோகிராபர் சாரியின் பேட்டி, பல இண்ட்ரஸ்டிங் ஆன விஷயங்களை உள்ளடக்கி, ஒருநாள் கிரிக்கெட் போல் விறுவிறுப்பாக இருந்தது. அதைவிட, கிரிக்கெட் பாணியிலேயே '76-நாட் அவுட்' என கட்டுரைக்கு மகுடமிட்டது நிரம்பவும் சந்தோஷமாக இருந்தது!

திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ லேட்டஸ்ட் அரசியலையும் ராமாயணத்தையும் ஒப்பிட்ட கமெண்ட்ஸ் அனைத்தும் பெருமளவு பெருமூச்சை ரிலீஸ் செய்தன.

மயிலாடுதுறை, ஜெ. ரஜினி ராம்கி.

✉ கலையுலகில் ஒரு புரட்சியையே செய்துவிட்ட ரஜினியை அரசியலுக்கு இழுத்து, அவரையும் அப்செட் ஆக்கி, ரசிகர்களையும் வேதனைக் குள்ளாக்கியவர்களுக்கு அந்த ரஜினி ரசிகர்களின் சாபம் வேண்டியது தான்!

சென்னை-14, கவிஞர் அய்யாறு வாசுதேவன்.

✉ 'கிரிக்கெட் ஸ்பெஷல்' - பக்கத்திற்குப் பக்கம் உற்சாகமூட்டினாலும், இந்த ஸ்பெஷலிலேயே கிரிக்கெட் வீரர் 'ராமன் லம்பா'வை நினைவுகூர்ந்து (தராசு பக்கம்) எழுதியது கண்களை நனையவும் வைத்து விட்டது!

சென்னை-49, சாந்தி சுவாமிநாதன்.

✉ காதலுக்காகக் கதாநாயகன் தன்னையே தண்டனைக்குள்ளாக்கிக் கொள்வது திரை உலகிற்கு ஒன்றும் புதுசு இல்லீங்கோ. எப்பவோ ஸ்ரீதர் 'கல்யாணப் பரிசு', 'சுமைதாங்கி' - போன்ற படங்களில் காண்பிச்சிட்டாரே! இதை உங்களுக்கும் சரி, சசிக்கும் சரி, 'சொல்லாமலே'யே இருக்க என்னால் முடியலே!

சென்னை-39, சிம்மவாஹினி.

✉ கிட்டத்தட்ட எல்லோரும் மறந்துவிட்ட "அறிவொளி" இயக்கத்தைப் பற்றி, தூசு தட்டிக் கட்டுரை வெளியிட்டு, கல்கி தன் தனித்துவத்தை நிரூபித்தது!

நாட்றம்பள்ளி, பாலு.

✉ பட்டுப் புடைவையைப் பரிசாகப் பெறுவதற்கான வினாவிற்கு விடையளிக்க, ஆண்டு இறுதித் தேர்விற்கு அனைத்துப் பாடங்களையும் படிப்பது போல் 'கல்கி' முழுவதுமே அங்குலம், அங்குலமாகப் படிப்பதால் எத்தனையோ சுவாரஸ்யமான புதுப்புது விஷயங்களை அறியமுடிகிறது! இதுவே ஒரு பரிசு கிடைத்த மாதிரிதான்!

கே. கமுகாசலபுரம், எஸ்.ஏ. கேசவன்.

✉ 'வட்டமேஜை' பகுதியில் கடைசியாக ஒரு கடிதம் (முந்தைய இதழ் ஒன்றில் வெளிப்பட்ட தவறுகளைச் சுட்டிக் காட்டி) பிரசுரமாகியிருந்தது. அதற்கு அடிக்குறிப்பாக 'தவறுக்கு வந்துகிறோம்' என்று தவறுதலாக வந்திருக்கிறதே...

சென்னை - 33, வி. அரவிந்த்.

(இந்தமுறை சரியாக வருந்துகிறோம். ஸாரி! - ஆர்)



• அறிவு பூர்வம்!

● சித்ரா கிருஷ்ண மூர்த்தி, கும்பகோணம்-1.

? உளவுத்துறை, காவல்துறை, மாநில அரசு, மைய அரசு.... இவை அனைத்தையும் விட தீவிரவாதிகள் திறமைசாலிகளா...?

! தீவிரவாதிகள் திறமைசாலிகள்தான். ஆனால் உளவுத்துறை அவர்களைக் காட்டிலும் சாமர்த்தியமாய் இயங்க வேண்டியது அவசியம். காவல்துறை அதற்குக் கை கொடுக்கவும் அரசு அதைக் கண்காணிக்கவும் வேண்டும். யாராவது ஒருத்தர் அசந்தாலும் போச்சு; டமால்தான்!

● எச்.எஸ். மணி, திருச்சி-5

?'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்'.... எந்தெந்த கட்சிகள்?

! கட்சிகளை விட, வாக்காளர்கள்தான் இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆனால் தவறி விடுகிறார்களே!

● மஞ்சுதேவன், மும்பை-86.

? 'டைடானிக்' போன்ற பிரும்மாண்டமான படங்கள் இந்தியாவில் தயார் ஆகவே ஆகாதா?

! வீட்டுக்குள்ளேயே சினிமா பார்க்கும் வாய்ப்பை டி.வி. ஏற்படுத்தி விட்டதால், இனி ஏராளமான செலவில் எடுக்கப்படும் பிரும்மாண்ட திரைப்படங்களுக்குத்தான் வரவேற்பு இருக்கும் என்ற கருத்தில் ஹாலிவுட் செயல்படுகிறது. ஆனால் இந்தக் கருத்தைப் பொய்யாக்கும் விதத்தில் அங்கே நல்ல கதை அம்சமும் சிறந்த நடிப்பும் கொண்ட எளிய படங்களும் வெற்றி பெற்று வருகின்றன. நமது நாட்டில் இரு ரகப் படங்களுக்கும் பஞ்சம் ஏற்பட்டு வருவது தான் சோகம்.

● ஆர். அப்துல் சலாம், திருச்சி-20.

? சந்திரனில் 'தண்ணீர்' உள்ளது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளதே?

! 'சென்னை குடிநீர் பிரச்னையைத் தீர்க்க, சந்திர மண்டலத்திலிருந்து தண்ணீர் இறக்கும் மெகா திட்டம்' என்று அடுத்து வரும் ஒரு தேர்தலில் வாக்குறுதி அளித்து வெளுத்து வாங்கலாம்!

● கல்லுக்குழி எம். இரவீந்திரன், திருச்சி-20

? அண்மையில் 'தினமலர்' அலுவலகத்தில் வன்முறையாளர்கள் நிகழ்த்திய அட்டூழியம் குறித்து உங்கள் கருத்து...?

! திட்டமிட்ட வெறிச் செயல். ஆளுங்கட்சியைக் கடுமையாய் விமர்சிக்கும் இதழ் என்பதால் முதல்வர் உடனடியாகக் கண்டனம் தெரிவித்ததோடு நில்லாமல் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

● எல். எம். மகாநந்தினி, திருவண்ணாமலை.

? பாரதிய ஜனதா கட்சியால் அ.தி.மு.க.வுக்குப் பெருமையா? அ.தி.மு.க.வால் பா.ஜ.க.வுக்குப் பெருமையா?

! பா.ஜ.க.வால் அ.தி.மு.க பெருமை அடைந்து விட்டது; அ.தி.மு.க.வால் பா.ஜ.க சிறுமை அடையப் போகிறது.

● ராஜி, கமுதி-3.

? 'நான் நினைத்தால் தி.மு.க.வை உடைத்து அழித்து விடுவேன்' என்று சு.சுவாமி சொல்லியிருக்கிறாரே?...

! எம்.பி ஆனதற்கு ஆக்கபூர்வமாக ஏதாவது சொன்னால் பரவாயில்லை. அழிவிலேயே போகிறது பாருங்கள் புத்தி!

● எஸ்.ஏ. கேசவன், இனாம்மணியாச்சி.

? என் மரணம் 31.12.1998, வியாழக்கிழமை சம்பவிக்கப் போவதாக ஒரு சோதிட வல்லுனர் வாயிலாகத் தெரிந்து கொண்டேன்;



• குரல் 'வளம்'



• தர்ம சங்கடம்!

# ரஜினி 'வாய்ஸ்'

அதற்குள் உருப்படியாக நான் என்ன செய்ய வேண்டும்?

! 1.1.99 அன்று அந்த ஜோதிடரை சந்தித்து, புத்தாண்டு வாழ்த்துச் சொல்லுங்கள்.



• அடைந்த பெருமை...



• ... அடையப் போகும் சிறுமை!

● கே.ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்-6.

? தென்னிந்தியா பக்கம் பி.ஜே.பி ஓரளவு கால் ஊன்றியும்கூட, தனித்து ஆட்சி அமைக்கும் அளவுக்கு வெற்றி பெறாதது பற்றி...?

! கொள்கை ரீதியான அரசியல் என்ற பாதையிலிருந்து விலகி, உணர்வு அடிப்படையிலான அரசியலுக்கு அவர்கள் மாறியதுதான் காரணம். தோற்ற இடங்களில் வென்றாலும் வென்ற இடங்களில் தோற்றிருப்பது எதிர்காலத்துக்கு மிகப் பெரிய எச்சரிக்கை.

● நீடா. சி. இளஞ்செழியன், சாலியமங்கலம்(அஞ்)

? இனி த.மா.கா நிலை...?

! தேர்தல் நடந்து, முடிவுகள் வரும் முன்னரே சுயபரிசோதனை செய்து, கட்சியின் நிறைகுறைகளை மதிப்பிட்டு, 'போக வேண்டிய தூரம் நிறைய' என்று மூப்பனார் பேசினார். அதன்படி கவனம் செலுத்தி வளர்த்தால், த.மா.காவுக்கு எதிர்காலம் உண்டு.

● எல். முருகன், மதுரை-10

? பத்திரிகைகளின் கருத்துக் கணிப்புகள் பொய்யாகிப் போனதற்கு என்ன காரணம்...?

! பத்திரிகையாளர்களே சற்று ஆடித்தான் போயிருக்கிறார்கள். ஃப்ரண்ட்லைன் ஆசிரியர் ராம் 'embarrassed' என்ற சொல்லையே பயன்படுத்தியிருக்கிறார். தவறு எங்கே நடந்தது என்பதை கருத்துக் கணிப்பு வல்லுனர்கள்தான் கண்டறிய வேண்டும்.

• மறந்தே போச்சு!



● ப. மூர்த்தி, பெங்களூர்-21.

? இப்போதைக்கு ஜெயலலிதாவுக்குத் தங்களது ஆலோசனை என்ன...?

! பிறரின் ஆலோசனைகளை அவர் எப்போதுமே மதித்ததில்லை.

● மலர் சூர்யா, பாண்டிச்சேரி.

? ரஜினி 'வாய்ஸ்' இனி எடுபடுமா?

! அவர் மக்கள் நலன் நாடுகிறவராகப் பேசினால் எடுபடும்; அரசியல்வாதியாகப் பேசி சொதப்பினால் எடுபடாது.



• சுய பரிசோதனை

● பி.என். லக்ஷ்மி, சென்னை-17 ❐

?'ஸ்பெஷல் போலீஸ் போட்டிருக்கு, சந்தனக் கடத்தல் வீரப்பனை இதோ பிடித்து விடுவோம்' என்று ஜம்பம் பேசியவர்கள் ஏன் மௌனமாகி விட்டார்கள்?

! வீரப்பன் மறுபடி பிணைக் கைதிகளாகச் சிலரைக் கடத்திப் போகக் காத்திருக்கிறார்கள். அப்போது மௌனம் கலையும்; மறுபடி வாய்ச் சவடால் ஆரம்பமாகும்!

● வி. பிரசன்ன கிருஷ்ணன், சென்னை-17

? 'ஜெயலலிதா ஊழல் செய்தது பெரிய குற்றம் இல்லை...' – தங்கள் வாக்களிப்பு மூலம் மக்கள் இந்தக் கருத்தைத்தானே சொல்லியிருக்கிறார்கள்?

! அப்படி நினைத்துக் கொண்டு ஆளுங் கட்சியினர் முழு வேகத்தில் இறங்கி விடக்கூடாதே என்று கவலையாக இருக்கிறது!

● எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.

? எழுத்தாளனுக்குத் தார்மீகக் கோபம் இருந்தால்தான் நல்ல எழுத்து பிறக்கும் என்கிற இந்திரா பார்த்தசாரதியின் கருத்து பற்றி...?

! உண்மைதான். ஆனால், அமைதியும் மென்மையும் ஆனந்தமும்கூட அதே அளவுக்கு ஆழமான வலிமையான எழுத்தைப் பிறப்பிக்க முடியும்.

# இனி எடுபடுமா?

❐ ரூ. 50 பரிசு பெறுபவர்:
பி.என். லக்ஷ்மி,
3. திலக் தெரு எக்ஸ்டன்ஷன்,
தி. நகர், சென்னை – 600 017



# பாண்டு வாத்தியத்துடன் ஒரு வெடிகுண்டு விழா!

கடந்த வாரத்தில், கடந்த நவம்பரிலிருந்து கோவையில் தங்கியுள்ள அதிவிரைவு அதிரடிப்படையினர் (Rapid action force) கோவை சிதம்பரம்பிள்ளை மைதானத்தில் தமது சாகச நிகழ்ச்சிகளைச் செய்து காட்டி பொது மக்களையும் பள்ளி மாணவ மாணவியரையும் மகிழ்வித்தனர். அதிலிருந்து சில துளிகள் இங்கே...

● கலெக்டர், டி.ஐ.ஜி., உதவி கமிஷனர் என உயர் அதிகாரிகள் ஏராளமாய் அமர்ந்திருக்க, பார்வையாளர்கள் ஆயிரக்கணக்கில் ஆர்வம் ததும்ப வீற்றிருக்க, திடீரென்று ஒரு கும்பல் கூட்டத்தை விலக்கிக் கொண்டு மையத்தில் நுழைந்தது. என்ன... ஏது.. என்று ஊகிப்பதற்குள் சரமாரியாய்க் கல்வீச்சு, தீ வைப்பு, கையில் தடிகளுடன் அவை ஆடின ஆட்டம்... அப்படியும் அவர்களை நம் கொங்கு மொழியில் பேசி, பேச்சு வார்த்தைக்கு அழைத்தார் RAF (Rapid action force) தலைவர். கலவரம் அதிகமாகவே, தடியடி நடத்திப் பார்த்தார்... எதற்கும் மசியாத கூட்டத்தில் கண்ணீர்ப் புகை குண்டுகளை வெடித்தனர் வீரர்கள். சிதறியோடிய கூட்டம் மொத்தமும் சிறிது நேரத்தில் திரும்பி வந்து தாக்க, வேறு வழியில்லாது துப்பாக்கிச்சூடு நடத்த... குண்டு பாய்ந்து விழுந்த ஆட்களை எடுத்துக் கொண்டு விரைந்தது RAF ஆம்புலன்ஸ்.... – இதை அப்படியே நிஜ பிம்பமாய்ச் செய்து காட்டி அனைவரையும் மெய்மறக்கச் செய்தனர் RAF வீரர்கள். கலவரக் கும்பலாகவும், அதை ஒடுக்குபவர்களாகவும் இரு தரப்பிலும் அவர்களே என்பதைப் பார்வையாளர்கள் கடைசி வரை நம்ப மறுத்தனர். அந்த அளவுக்குத் தத்ரூபம்!

● கலவரக் கும்பலை எப்படி அடக்குவது என்பது பற்றின செயல்முறை விளக்கத்தோடு நில்லாது, பணியில் காவலிருக்கும் காவலாளியை மறைந்திருந்து தாக்கும் சமூக விரோதக் கும்பலை அடக்குவது, அரசியல் பிரமுகரை வன்முறையாளர்கள் கடத்துவது... அவர்களிடமிருந்து அவரை மீட்கக் கையாளும் உத்தி, ஒருவர் நான்கைந்து பேரைச் சமாளிப்பது... 'அடேயப்பா நம்ம ஊர் டைரக்டருக பார்த்திருந்தா... நல்லா ஒரு ஃபைட் சீனை கட்டிருப்பாங்க...!' என்றார் பக்கத்திலிருந்தவர்.

● அதிரடிப்படையின் சிறப்பு ஆம்புலென்ஸில், ஃபர்ஸ்ட் எய்ட் சமாசாரங்களோடு ஏராளமான வெடிகுண்டுகளும் துப்பாக்கி தோட்டாக்களும் பார்வையாளர்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தன. அது பற்றிச் செயல்முறை விளக்கம் கூற இருவர். இதை விட மைதானத்தின் மையத்தில் வைத்திருந்த கறுப்புப் பெட்டி (கார் பேட்டரி போல்) அனைவரின் கவனத்தையும் கவர்ந்தது. கார் வெடிகுண்டு (காரிலிருந்து எடுத்தது) என சிலர், அது டிபன் பாக்ஸ் வெடிகுண்டு என சிலர்... அதை வெடிக்கச் செய்து வேடிக்கை காண்பிக்கப் போகிறார்கள் எனப் பலப்பலர். அதை வெடிக்கச் செய்தால் பக்கத்தில் 'மிருகங்கள் மிரண்டிடுமே' (பக்கத்தில் வ.உ.சி. பார்க் மிருகக் காட்சி சாலை) என ஏராளமாய் கூட்டத்தில் பேச்சு அடிபட்டது. ஆனால் கடைசி வரை அதை வெடிக்கச் செய்யவேயில்லையென்பது பலருக்கும் வருத்தம். அத்தனை பேரும் கண்ணீர் விட்டுக் கொண்டும்... கண்ணைத் தேய்த்துக் கொண்டும்... வருத்தத்தினால் அல்ல...! கண்ணீர் புகைக் குண்டு கூட்டத்தின் அருகிலேயே விழுந்ததால் வந்த வினை!

கட்டுரை, படம்: **கா. சு. வேலாயுதன்**

பொனனித தோற்றம் :

# பொன்னியின் செல்வன் தோன்றிய இடம்!



• இயற்கை எழில்



• மீனாட்சி அம்மாள்



• பிரமிட் வடிவ கூரை

அமரர் கல்கி, இன்றைக்கு சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னால் ஈரோடு பக்கம் ஒரு பொதுக் கூட்டத்துக்குச் சென்றிருந்தார். அப்போது எம்.எல்.ஏ. பெரியசாமி கவுண்டர் தமது பண்ணைக்கு வர வேண்டும் என்று கல்கிக்கு அழைப்பு விடுத்தார். கிராமப்புறத்திலேயே பிறந்து வளர்ந்த கல்கி அவர்களுக்கு விவசாயத்தில் ரொம்ப ஈடுபாடு உண்டு. ஆனதால், உடனே சம்மதித்தார். கொடுமுடியிலிருந்து பத்துப் பன்னிரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் தமது பண்ணைக்கு, கல்கியை அழைத்துச் சென்றார் எம்.எல்.ஏ.

எங்கு நோக்கினாலும் நாலா புறமும் பச்சைக் கம்பளம் விரித்தாற்போல் நெல் வயல்கள். இடை இடையே குலை தள்ளும் தென்னைகள். சலசலத்துக் கொஞ்சி வரும் காவிரிக் கரையின் வளம். காவிரித் தாயின் இந்த தரிசனம் கிடைக்கப் பெற்ற கல்கி, "அடடா! பொன்னித் தோற்றம் எத்தனை அழகு! இங்கே ஒரு குடிசை போட்டுக் கொண்டு வாழ்ந்தால் போதுமே; நிம்மதியாக இயற்கை எழிலை அனுபவித்தபடியே பொன்னியின் செல்வனை எழுதி முடிப்பேனே" என்று சொன்னார்.

ஆனால் 'காணி நிலம்' கேட்ட பாரதியின் ஆசை போல கல்கியின் ஆசையும் நிறைவேறவில்லை. எல்லோரையும் போல் சூழ்நிலையின் கைதியாகிப் போன அவர், சென்னை திரும்பி, தமது ஆசிரியர் பணியையும் இதர பணியையும் தொடர நேர்ந்தது. அவர் உள்ளத்தில் குடி புகுந்திருந்த 'பொன்னியின் செல்வன்' இதற்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பிறகே வலம் வர ஆரம்பித்தான்.

என்றாலும் பெரியசாமி கவுண்டர், கல்கியின் ஆசையைப் பகுதி அளவேனும் நிறைவேற்றி வைத்தார்! கல்கி பார்த்து ரசித்த இடத்தில் அவர் விரும்பியபடியே 'பிரமிட்' வடிவ கூரையுடன் ஒரு குடிசை அமைத்து, அதற்குப் "பொன்னித் தோற்றம்" என்று பெயரும் சூட்டினார். இன்னும் அதே பெயருடன் அது திகழ்கிறது!

பெரியசாமி கவுண்டர் காலமான பிறகு அவரது வாழ்க்கைத் துணைவியார் மீனாட்சி அம்மாள், கணவரின் நினைவைப் போற்றும் விதமாக அவருடைய நிலம் முழுவதையும் கொடுமுடியில் உள்ள ஸ்ரீ சங்கர வித்யா சாலை மேல் நிலைப் பள்ளிக்கு அன்பளிப்பாக வழங்கினார். இன்று ஸ்ரீ சங்கர வித்யா சாலை ஆறு கிளைகள் பரப்பி, 6000 மாணவ மாணவியருக்குக் கல்வி வழங்கி வருகிறது. நூற்றாண்டும் காணவிருக்கிறது.

அன்று கல்கி அமர்ந்திருந்து இயற்கை எழிலை ரசித்த இடத்தில் மீனாட்சி அம்மாள் ஓர் ஆரம்பப் பள்ளியைத் தொடங்கி நடத்தி வருகிறார். கல்கியும் பெரியசாமி கவுண்டரும் உரையாடிக் கொண்டிருந்த நினைவுகள் மயிலிறகாக அவர் உள்ளத்தை வருடிக் கொண்டிருக்கின்றன. அவருடைய சகோதரர் தமது டயரியில் எழுதி வைத்த ஒரு கவிதை, அந்தக் குடும்பமே கல்கி அவர்கள் வருகையால் எப்படி ஆட்கொள்ளப்பட்டது என்பதை உணர்த்துகிறது:

*பொன்னித் தோற்றம் எனப் பெயர்*
*வைத்தார்,*
*கன்னித் தமிழ் பயின்ற கல்கி, அமரர்;*
*கன்னியர்க்கும் காளைச் சிறுவருக்கும்*
*கல்வி நிலையமதனைக் கலைவாணியே,*
*வளர்ப்பாய்!*

— மீனாட்சி சேஷன்




# முழுமை பெறாமல் ஒரு டாகுமெண்டரி!

இந்தியாவின் தொன்மையான பாரம்பரியத்தையும், கலாசாரத்தையும், அரசியல் அமைப்பையும், சமீபத்திய பொருளாதாரத் துறை மாற்றங்களையும் அடிப்படையாக வைத்து, இவற்றை முதல் 5000 வருடங்கள், அடுத்த 500 ஆண்டுகள், 'அதற்கடுத்த' 50 வருடங்கள், சமீபத்திய 5 வருடங்கள் என்று 4 பகுதிகளாகப் பிரித்து இந்தியா – 5555 என்ற டாகுமெண்டரியை, இந்திய அரசின் வெளியுறவுத் துறையின் சார்பில் (மொத்தம் இரண்டு மணி நேரத்துக்கு வருகிற மாதிரி) தயாரித்திருக்கிறார்கள், கிருஷ்ணசாமி அசோசியேட்ஸ் நிறுவனத்தினர்.

'இண்டஸ் வேலி டு இந்திரா காந்தி', 'பஞ்சாப்', ஆகிய டாகுமெண்டரிகள் இவர்களின் படைப்புகளே. அதனால்தானோ என்னவோ, முதல் டாகுமெண்டரியில், 'இண்டஸ்வேலி' யில் காண்பித்த பல அம்சங்களும் அப்படியே இடம்பெற்றிருக்கின்றன. முதல் 5000 வருடத் தொன்மையையும், நாகரிகத்தையும், கலாசாரத்தையும் இதிகாச – சரித்திர ஆராய்ச்சி, மற்றும் சரித்திர ஆதாரபூர்வமாக மட்டுமே தொகுத்திருந்தால் டாகுமெண்டரியின் அடிப்படை நோக்கம் வெற்றி பெற்றிருக்கக்கூடும். (எம்.எஸ்.ஸின் இரண்டு பாடல்கள், காஞ்சி முனிவரின் கனகாபிஷேகம் ஆகியவற்றை மூன்றாவது தொகுப்பில் கொண்டு வந்து, ஆயிரமாயிரம் வருடத்துக்கு முன்பிருந்த கலாசாரத்தின் இணைப்பையும் தொடர்பையும் விட்டு விடாமல் காத்து வரும் சிறப்பை வலியுறுத்தியிருக்கலாம்.)

இரண்டாவது டாகுமெண்டரியில் இஸ்லாமியக் கலாசாரம் எப்படி இசை வடிவிலும், கட்டடக் கலை வடிவிலும் இந்தியக் கலாசாரத்தோடு இணைந்து ஒரு புதிய வடிவம் கண்டது என்பதை, இன்றைய பின்னணியை மனத்தில் கொண்டு, வெகு நாசுக்காகத் தொகுத்திருக்கிறார்கள்.

மூன்றாவது தொகுப்பில், தொழில் வளர்ச்சியின் உத்வேகம் வழங்கப்பட்டிருக்கும் முறையில் (format) புதிய உத்தியைக் கையாண்டிருக்கலாம். கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸின் ஆதிக்கம் திரைப்பட – வீடியோ துறையில் மிகுந்திருக்கும் இந்தக் காலத்தில், ஒரு சாதாரண கம்பெனி ப்ரொஃபைல் மாதிரி இந்தப் பகுதியைத் தயாரித்திருப்பது ஏமாற்றமளிக்கிறது.

டாகுமெண்டரியில் மது அம்பட்டின் கேமரா, சில காட்சிகளை ஓவியமாகவே வழங்கியிருக்கிறது.

டாகுமெண்டரி முழுக்க, பி.சி. ராமகிருஷ்ணாவின் குரல், பிசிறில்லாமல் ஒலிக்கிறது. இடையிடையே, தயாரிப்பாளர் – இயக்குநர் கிருஷ்ணசாமி சிறப்பான விளக்கம் தருகிறார்.

உலக அரங்கில் உள்ள பல முன்னேறிய நாடுகளின் தூதரகங்களிலும், கான்ஸலேட்டுகளிலும் திரையிட்டுக் காண்பிக்கத் தயாரிக்கப்பட்ட டாகுமெண்டரிகள் இவை. எனவே தயாரிப்பின் தரமும், உலகத்தரத்தை எட்டியிருக்க வேண்டாமோ? பின்னணி இசை கூட சுமார்தான். இதுபோன்ற முக்கியமான டாகுமெண்டரிகளுக்குப் பின்னணி இசை வழங்கும் விசுவமோகன் பட், லூயி பாங்க்ஸ் போன்றவர்களைத் தயாரிப்பாளர்கள் நினைத்துப் பார்க்கவில்லை போலும்!

நம்பி

# கண் சிமிட்டும் நேரத்தில் உங்கள் குழந்தை வளர்ந்து விடுவாள்



## அதே வேகத்தில் உங்கள் பணம் வளர்ந்திட




காலங்கள் மாறினாலும் சில கடமைகள் மாறுவதில்லை. உங்கள் செல்ல மகளின் திருமணம்—உங்கள் தலையாய கடமைகளில் ஒன்று. அதற்கு கரூர் வைஸ்யா வங்கியின் திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்வதே நன்று.

இந்திய தனியார் வங்கிகளுள் முதலாவதாகத் தேறியுள்ள கரூர் வைஸ்யா வங்கியின் நூறு சதவீத பாதுகாப்புடன்!

இன்றே திருமகள் திருமண திட்டத்தில் முதலீடு செய்யுங்கள். உங்கள் மகளின் திருமணத்தை நிறைவாக நடத்துங்கள்.

KVB Since 1916

**தி கரூர் வைஸ்யா பேங்க் லிட்.**

கரூர் – 639 002

A.D.நவநீதன்
சேர்மன்

**நாளும் நம்பிக்கை வளர்க்கும் வங்கி**

Anugrah 2484/98 Tam R

என்னைச் செதுக்கிய எண்ணங்கள் — 11

# எம்.ஜி.ஆர். கொடுத்ததை மறுத்தேன்!

அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில், இண்டர்மீடியட்- பட்டப்படிப்புக்கு முன் முடிக்கும்- வகுப்பில் நான் சேர்ந்தேன்.

நான் கிராமத்துப் பையன். பல்கலைக் கழகப் படிப்பு என்பது பெரிய விஷயம். கனவு கூட காண முடியாத விஷயம். எனினும் படித்தேன்; காரணம் என் மாமா விருத்தாசலம் அவர்கள். அவர்கள் அப்போது சிதம்பரத்தில் வருவாய்த்துறை இலாகாவில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். கம்பீரமான உருவம்; நல்ல சிவப்பு. கிராமத்தில் எங்களைப் பார்க்க வந்தார்களானால்- நான் எட்டு வயதுச் சிறுவன் அப்போது-அண்ணாந்து பார்ப்பேன். அந்தத் தெருவையே நிறைத்துக் கொண்டு நடந்து வருவார்கள். எப்போதும் பெரிய கை; தாராள உள்ளம். சேலத்து மாம்பழங்களை பை நிறைய வாங்கி வருவார்கள்.

என் மாமா அவர்கள், என் தந்தையினுடைய அக்காள் மகன். மாமாவின் இளவயதிலேயே மாமாவின் பெற்றோர் காலமாக, என் தந்தைதான் தன் அக்காள் மகனை இளவயதில் வளர்த்திருக்கிறார்கள்.




அந்தப் பாசம். என் மாமா, திருமணம் செய்து கொள்ளும் அந்த காலகட்டத்தில் எங்கள் இனத்தில் பெண்கள் குறைவு. வேறு இனத்தில் பெண்கள் எடுத்தால் ஒதுக்கி, சாதிப் பிரஷ்டம் செய்து விடுவார்கள். எனவே எங்கள் மாமா திருமணம் செய்து கொண்ட போது "என் மாமா மகனுக்கு என் பெண்ணை கொடுக்கப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

நான் ஒன்பதாவது படித்த போதே மாமா அவர்கள் "என் பையன்களுடன் நான் அவனை சிதம்பரத்தில் படிக்க வைக்கிறேன்" என்று கேட்டார்கள். "பத்தாவது படிப்பை முடித்தவுடன் நீ அழைத்துப் போ!" என்று எங்கள் வீட்டில் சொல்லி இருக்கிறார்கள். எனவே நான் மயிலாடுதுறை உயர்நிலைப்பள்ளியில் ஆறாவது படிவம் (பதினோராம் வகுப்பு) முடித்தவுடன் என்னை மாமா அவர்கள் சிதம்பரத்திற்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

இதற்கு முன் எனது சிதம்பர விஜயத்தை சொல்ல வேண்டும். மயிலாடுதுறைப் பள்ளியில் நான் பத்தாவது படித்துக் கொண்டிருந்த போது, என் அண்ணன் திருமண அழைப்பை எடுத்துக் கொண்டு நான் சிதம்பரம் சென்றேன். என் மாமாவின் இரண்டாவது மகன் திரு பாலசுந்தரம் அப்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தார். இயல்பியல் படிப்பில் (ஆனர்ஸ்) சிறப்பு வகுப்பு, மூன்றாண்டுப் படிப்பு. அவர் படிப்பில் அசகாய சூரர். அவருடைய அறிவும் ஞாபக சக்தியும் இன்றும் அபாரமானது. ஆரம்பப் பள்ளியில் ஒன்றாம் வகுப்பிலிருந்து மூன்றாம் வகுப்பிற்கும், மூன்றாம் வகுப்பிலிருந்து ஐந்தாம் வகுப்பிற்கும் 'டபுள் பிரமோஷன்' பெற்றவர். 'ஆனர்ஸ்' படிப்பில், அவர் வகுப்பில், அவர்தான் முதல் மாணவர். அவர் வயதில் உள்ள எங்கள் எல்லோருக்கும் அவர்தான் எடுத்துக்காட்டு.

நான் அங்கு சென்றிருந்த போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை சுற்றிக் காட்டினார். முதலில் நான் பார்த்த இடம் சாஸ்திரி ஹால் எனப்படும் பட்ட மளிப்பு விழா மண்டபம். எதிரே மிக அழகான புல் வெளி. மலர்த் தோட்டம், நீரூற்று. கட்டடத்தை நிமிர்ந்து பார்த்தால் வானுயர நிற்கும். கட்டி அணைக்க முடியாத வெண்மையான தூண்கள். படிகளைக் கடந்து உள்ளே சென்றேன். எங்கும் வெள்ளை வெளேரென்ற சலவைக்கல் பதித்த ஹால்கள். "அதன் மீது கால் பதித்து நடக்கலாமா?" என்று கேட்டேன்! உள்ளே ஒரு பக்கம் நடராஜர் சிலையும், மறு பக்கம் சயனித்திருக்கும் கோவிந்தராஜப் பெருமாள் சிலையும், நடுவில் மேடையுமாக பெரிய கனவுலகம் என் கண் முன் தெரிந்தது.



• விஸ்கான்சின் பல்கலைக் கழகத்துக்கு முன்பாக நண்பருடன்...

'சின்னண்ணன்' என்று நாங்கள் பாசத்துடன் அழைக்கும் பாலசுந்தரம் என்னை மேலே உள்ள 'செனட்' ஹாலுக்கு அழைத்துச் சென்றார். நான் மயிலாடுதுறையில் ஆசிரியர் உட்காரும் மர நாற்காலியைத் தான் பார்த்திருக்கிறேன். அங்கே சித்திர வேலைப்பாடு செய்த நாற்காலிகள். அதில் உட்காரவும் சாய்ந்து கொள்ளவும் பஞ்சு வைத்து வெல்வெட்டினால் இருக்கை. நான் பிரமித்துப் போனேன்.

''அண்ணே, இங்கே படிக்க நீங்கள் பாக்கியம் செய்தவர்கள்!'' என்றேன். 'அடாடா! இங்கே படிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்று எண்ணினேன். படிப்பதற்கு நான் அங்கே வருவேன் என்றோ, வர முடியும் என்ற நினைப்போ, ஏதும் இல்லை. அந்தக் கல்விக் கோயில் என் மனத்தில் அழியாத இடம் பெற்றது. அதைக் கட்டி வளர்த்த ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களைப் பார்த்திருக்கிறேன். நான் மயிலாடுதுறையில் தேசிய பள்ளியில் படித்தபோது அதன் ஆண்டு விழாவுக்கு வந்திருந்தார். பின்னால் நான் திரு ஏ.சி. முத்தையாவுக்கு, தனியாக பாடஞ் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியராக இருந்த போது "அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அங்கே இல்லாவிட்டால் நான் படித்திருக்க முடியாது" என்று கூறுவது உண்டு.

**டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி**

**நா**ன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்த இரண்டாவது ஆண்டு. வழக்கமாக நானும் எனது நண்பர்கள்



இருவரும் மாலைவேளைகளில் ரயில்வே லயனை ஒட்டி காலாற நடப்பதுண்டு. அங்கே பாலமான் ஆறு ஓடுகின்ற இடத்தில், மதிலில் உட்கார்ந்தபடி பேசிக் கொண்டிருப்பதுண்டு.

அப்போது தற்செயலாக "நீ என்ன ஆக விரும்புகிறாய், படித்தபின்?" என்றொரு கேள்வி எங்களுக்குள் எழுந்தது. ஒரு நண்பர் "நான் கடை வைத்துத் தொழில் செய்யப் போகிறேன்!" என்றார், மற்றவர் "எனக்கு எதுவும் திட்டமில்லை" என்றார். நான் "நிறையப்படித்தவனாக வர வேண்டும் என்பதுதான் என் ஆசை" என்றேன்.

இந்த எண்ணம் எங்கிருந்து வந்தது? ஏன் வந்தது? காரணம், எனது ஆசிரியர் ரமணி அய்யர் அவர்களா? கல்கி அவர்களா? அல்லது மயிலாடுதுறைப் பள்ளிச் சூழ்நிலை தந்ததா?

அதை நான் அப்போதே மறந்து விட்டேன். நான் வேதியலில் இளநிலைப்பட்டம், பி.எஸ்ஸி பெற்று ஓராண்டு சீர்காழியிலும் ஐந்தாண்டு குடந்தை அரசினர் கல்லூரியிலும் பின் கிண்டியிலும் வேலை பார்த்து, படித்து அமெரிக்கா சென்றேன்.

அமெரிக்காவில் நான் டாக்டர் பட்டம் பெற்று பேராசிரியராக வேலை பார்த்துப் பத்தாண்டுகள் இருந்து, விகடனில் மனவியல் சம்பந்தமான கட்டுரைகள் எழுதிய போது, மனவியலில் டாக்டர் பட்டம் பெற வேண்டும், மேலும் படிக்க வேண்டும் என்ற ஆசை விடவில்லை. ஹார்வர்டிற்கு விண்ணப்பிக்கத் தீர்மானித்தேன். வீட்டில், ஒரு நாள் இரவுச் சாப்பாட்டை மேஜையில் உட்கார்ந்து அனைவரும் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது இதைச் சொன்னேன். என் மூத்த மகன் சித்தார்த்தன் பட்டம்பெற்று அப்போது வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அவன், "அப்பா! உங்களிடம் இப்போது ஐந்து பல்கலைக்கழகப் பட்டங்கள் இருக்கின்றன! முதலில் இதைக் 'கேஷ்' பண்ணுங்கள்!" என்றான். எனக்கு சற்று அதிர்ச்சி! நான் ஒன்றும் பதில் பேசவில்லை. யோசித்துப் பார்த்தேன். குடும்பத்தை எல்லாம் விட்டு விட்டு இனியும் நாம் நான்காண்டுகள் மேல் படிப்புப் படிக்கச் செல்வது சரியல்ல. நாமே படித்துக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தேன். பிரணவ மந்திரத்தை தந்தைக்கு உபதேசித்த சுவாமிமலை முருகன் போல அவன் தோன்றினான். நானும் பார்த்திருக்கிறேன். அவன் எப்போதுமே எல்லாவற்றையும் சரியாக, திருந்தச் செய்ய வேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டவன்; சொல்லப் போனால் நாம் ஏதோ முந்திப் பிறந்து விட்டோம்! நமக்குப் பின்னால் பிறந்த பிள்ளைகள் எல்லாம் அறிவில் சில சமயம் நம்மைவிட கெட்டிக்காரர்களாய் இருப்பார்கள்.

என் படிப்பும் என் ஆசிரியத் தொழிலும், என்னிடம் சில தனி குணங்களைத் தோற்று வித்திருந்தன. அதாவது பேசுவது, விளக்குவது, மேலும் படிப்பது, பல விஷயங்களைத் தெரிந்து கொள்வது போன்ற பல குணங்கள். இந்த குணங்களின் தாக்கம் என்னை நடைமுறை உலகிலிருந்து பெரிதும் அப்புறப்படுத்தி வைத்திருந்தது




என்பதை உணர்ந்தேன். (IVORY TOWER PEOPLE) தந்தத்தினால் செய்யப்பட்ட உச்சி மாடத்தில் அமர்ந்திருப்பவர்கள் என்று சொல்வார்கள் ஆங்கிலத்தில். "அடிக்கடி மாணவர்களது பரீட்சைத் தாளைத் திருத்துவதினால், எங்கே குறைகள் இருக்கின்றன என்று பார்க்கும் குணம் ஏற்படுகிறது" என்று சொல்வார் எனது மைத்துனர், பேராசிரியர் பாலசுந்தரம். அது என்னுள்ளும் ஏற்பட்டது!

அதைவிட ஒரு விஷயத்தை என்னுள் ஆழமாக நான் உணர்ந்தேன். எனது முழுத் திறமைகளும் இங்கே வர வாய்ப்பில்லை என்பதை நன்கு உணர்ந்தேன். வெறும் சம்பளமும் போதுமானதாக இல்லை; என் அறிவுக்கும் திறனுக்கும் ஏற்றதாக இல்லை. அப்போதே நான் பல அமெரிக்க நண்பர்களுக்குப் புதிய தொழில் துவங்குவதிலிருந்து



''ஆனாலும் நம்ம பங்கஜம் செஞ்சது ரொம்ப மோசம்!''

''எதைச் சொல்லறே?''

''தன் பையனுக்குப் பொண்ணு பார்க்கப்போன இடத்துல, 'பொண்ணு கூட தனியா பத்து நிமிஷம் சண்டை போட்டு பார்க்கலாமா?'ன்னு கேட்டாளாமே!''

– யமுனா ரெங்கநாதன்



''என்ன கமலா, டீவில படம் புள்ளி புள்ளியாத் தெரியுது?''

''மண்ணாங்கட்டி. இதுக்குத்தான் கொசுவலைக்குள்ளேயிருந்து டீவி பார்க்காதீங்கன்னு நான் சொல்றது!''

– ஆர். வசந்தகுமார்

''அந்த இசையமைப்பாளர் ஏன் கடுப்புல இருக்காரு?''

''புதுசா திறக்கப்படப்போற ஒரு ஜெராக்ஸ் கடையை அவரைவிட்டு திறக்கச் சொல்லி அழைப்பு வந்திருக்காம்!''

– பாஸ்ரா



ஸ்டாக் மார்க்கெட் வரை பல ஆலோசனைகளைக் கூறி வந்தவன்.

அத்துடன் வாழ்க்கை செக்குமாடாகப் போய்க் கொண்டிருப்பது போன்ற ஒரு சலிப்பு. ஆங்கிலத்தில் இதை எரிந்து கருகுதல் (Burn out) என்பார்கள். என் வாழ்வில் ஒரு மாற்றத்தின் தேவையை உணர்ந்தேன்.

தொழில் சம்பந்தமான நூல்களைப் படிக்க ஆரம்பித்தேன். தொழிலில் வெற்றி பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்தேன். தொழில் துவங்குபவர்கள் தனித்தன்மை கொண்டவர்கள் என்றும் சுதந்திரத்தை அதிகம் நாடுபவர்கள் என்றும் அதில் முக்கியமாகக் குறிப்பிட்டிருந்தார்கள். முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆர். எனது நண்பர். அவர் முதல்வர் பதவிக்கு வருமுன் நான் அவரை அமெரிக்காவிலுள்ள பல்கலைக் கழகங்கள் அழைக்க ஏற்பாடு செய்தேன். அவர் எனக்கு எவ்வளவோ பதவிகள் அளிக்க முன் வந்த போதிலும் நான் அவற்றை மறுத்துவிட்டேன்; காரணம் என்னுள் ஆழமாக ஓடிக்கொண்டிருக்கும் தனித்தன்மையும் சுதந்தர உள்ளமும்தான்.

நாடு இன்று கேவலங்களாலும் அவலங்களாலும் நசித்துக் கொண்டிருக்கிற நிலையில், வாழ்க்கை நெறிகள் தலை கீழாகப் போய்விட்ட நிலையில் நாம் அடிப்படைகளைச் சரி செய்தால் தவிர இந்த நாடு மீளாது. ''இன்று தேவைப்படுவது இன்றிருக்கும் நிலையிலிருந்து மாறுபட்ட தனித்தன்மையும் சுதந்தர உணர்வும் துணிவும் தான்'' என்று எனது தனித்தன்மை பற்றி எனக்கு எழுதிய வாசகர் ஒருவருக்கு எழுதினேன். அவர் கேட்டிருந்தார், ''ஏன் நீங்கள் ஒரு கட்சியில் சேர்ந்து எளிதாக எல்லாக் காரியங்களையும் செய்யலாமே? என்று.

இப்பிரபஞ்சம் தனித்தும் இயங்குகிறது; இணைந்தும்-ஒன்றை ஒன்று சார்ந்தும்-இயங்குகிறது. அப்படித்தான் நம் வாழ்க்கையும் அமைய வேண்டும். எனினும் நமது தனித்துவத்தையும் சுதந்தரத்தையும் பலி கொடுத்துவிட்டுச் செயல்படுவது நாம் நமது ஆன்மாவுக்குச் செய்யும் இழுக்காகும். அப்படிப்பார்க்கும் போது ஓரளவுக்கு ஆசிரியர்களும் சரி, சொந்தமாகத் தொழில் செய்பவர்களும் சரி, தனித் தன்மையிலும் சுதந்தரத்திலும் அதிகம் பழகிவிட்டார்கள் என்றுதான் நான் நினைக்கிறேன்.

(தொடரும்)

## அட இதுல இவ்ளோ விஷயம் இருக்கா? – 7

# எக்ஸ்-ரேவுக்கு மாற்று இருக்கிறதா?

எக்ஸ்ரேவினாலே என்னென்னவெல்லாம் பாதிப்பு என்பதை ஓரளவுக்கு அறிந்து கொண்டோம். அதுவும் வெகு வேகமாகப் பிரிந்து, எண்ணிக்கையில் அதிகரித்துக் கொண்டிருக்கும் உயிரணுக்களைக் கொண்டவர்களையும் குழந்தைகளையும் எக்ஸ்ரே கதிர்கள் அதிகம் பாதிக்க வாய்ப்புண்டு.

இருந்தாலும் இன்றைய தேதியில் எக்ஸ்ரே பரிசோதனைகளை முழுவதுமாகத் தவிர்த்து விடுவது சாத்தியமல்ல.

அதுவும் எலும்பு உடைந்து விட்டதோ என்ற சந்தேகம் ஏற்பட்டால் அதை உறுதி செய்து கொள்ள டாக்டர் உடனடியாகத் தரும் ஆலோசனை எக்ஸ்ரேதான்.



எக்ஸ்ரே கதிர்களை நம் உடலில் உள்ள எலும்புகள் கிரகித்துக் கொள்கின்றன. அதாவது அதன் ஒரு புறத்தில் நுழையும் எக்ஸ்ரே கதிர்கள் மறுபுறத்தின் வழியாக வெளியேறி விடுவதில்லை. இதன் காரணமாக கீழே உள்ள எக்ஸ்ரே பிலிமில் எலும்புகள் மிகத் துல்லிய வெள்ளை நிழலை ஏற்படுத்துகின்றன.

எலும்பு தவிர உடலின் பிற பகுதிகள் எக்ஸ்ரே கதிர்களை பல்வேறு அளவுகளில் அனுமதிக்கின்றன. இதன் காரணமாக வெவ்வேறு அடர்த்தி கொண்ட நிழல்கள் பிலிமின் மீது பதிகின்றன.

ப்ளூரோஸ்கோப் என்ற கருவியின் மூலமாக எக்ஸ்ரே பிலிமைப் பார்க்கும்போது, மிகத் துல்லியமாக பாதிப்புகளைக் கணக்கிட முடியும்.

உடலின் எப்பகுதியையும் துல்லியமாய், எக்ஸ்ரே எடுக்க வேறு சில வழிகளைக் கடைப்பிடிக்கிறார்கள் மருத்துவர்கள். உடலுக்கு எந்தவித பாதிப்பையும் ஏற்படுத்தாத,

அதே சமயம் எக்ஸ்ரே கதிர்கள் பாய்ந்தால் முழுவதுமாக அதை அனுமதித்து விடாத தன்மை கொண்ட ஒரு பொருளை உட்கொள்ளச் செய்து, அதற்குப் பிறகு எக்ஸ்ரே எடுப்பார்கள். உதாரணமாக பேரியம் சல்பேட் கரைசலை விழுங்கினால் சிறுகுடல் பகுதியில் அது தங்கி எக்ஸ்ரே கதிர்களை கிரகித்துக் கொண்டு, அந்தப் பகுதி எக்ஸ்ரே பிலிமில் தெளிவாகத் தெரியும்படி இருக்க உதவி செய்யும். தொண்டைக் குழாயை எக்ஸ்ரே எடுக்க வேண்டும் என்றால்கூட, கொஞ்சம் பேரியத்தை விழுங்கச் சொல்வார்கள். சிறுநீரகத்தை எக்ஸ்ரே எடுக்க வேண்டுமென்றால் இரு கைகளிலும் உள்ள ரத்த நாளங்களின் வழியாக இதை ஏற்றுவார்கள். ஜீரண குழாய்ப் பகுதியை எக்ஸ்ரே எடுக்க வேண்டுமானால் பேரியத்துடன் கொஞ்சம் காற்றையும் உள்ளே செலுத்துவார்கள். அப்போது எக்ஸ்ரே பிலிமில் பதிவு மேலும் துல்லியமாக இருக்கும்.

எக்ஸ்ரேவினால் இன்னொரு முக்கிய பலனும் உண்டு. தொண்டையில் ஏதோ சிக்கிக் கொண்டு விட்டது அல்லது குழந்தை ஏதோ காசை விழுங்கிவிட்டது (அல்லது விழுங்கியதா இல்லையா என்று தெரியவில்லை) என்றால் உடனடியாகக் கை கொடுப்பது எக்ஸ்ரேதான்.

புற்றுநோய்க்கு எக்ஸ்ரே கதிர்கள் மூலம் நடத்தப்படும் ரேடியம் சிகிச்சை பற்றி நமக்குத் தெரியும். நம்மில் பலரும் அறிந்திராத வேறு சில பயன்கள் கூட எக்ஸ்ரேவினால் உண்டு. ஆபரேஷனின் போது சர்ஜன்கள் அணிந்து கொள்ளும் கையுறைகள், சில வகை நுண்ணிய சிரிஞ்சுகள் இவற்றையெல்லாம் வழக்கமான முறையில் ஸ்டெரிலைஸ் செய்வது கஷ்டம். ஏனென்றால் இவற்றை ஓரளவுக்கு மேல் வெப்பப்படுத்தினால் பாதிக்கப்பட்டுவிடும். எனவே இவற்றின் மீது எக்ஸ்ரே கதிர்களை பாய வைத்து ஸ்டெரிலைஸ் செய்வது வழக்கம்.

மின் காந்த கதிர்வீச்சுகளிலேயே மிகக் குறைவான அலைநீளம் கொண்டதும், மிக அதிகமான சக்தியை வெளிப்படுத்துவதும் எக்ஸ்ரேதான். இதன் காரணமாகத்தான் அவற்றின் ஆபத்துகளையும் மீறி அவற்றைத் தொடர்ந்து மருத்துவர்கள் பயன்படுத்துகிறார்கள். ●

— ஜி.எஸ்.எஸ்.



# டைட்டானிக்

'ஏதோ கதைக்காக ஒரு கப்பல் விபத்து' என்றில்லாமல் 'நிஜமாகவே சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் நடுக்கடலில் நிகழ்ந்த பேரழிவு' என்கிற எண்ணம் மனத்தில் அழுத்தமாக ஒட்டிக் கொண்டு விடுகிறது.

அதனால்தான் "மனிதனால் வடிவமைக்கப்பட்ட மிகப் பெரும் நகரும் பொருள்" என்று வர்ணிக்கப்பட்ட டைடானிக்கின் பிரம்மாண்டத்தைத் திரையில் பார்க்கும் போது பெருமையாக இருக்கிறது.

அதனால்தான் மூழ்கிக் கொண்டிருக்கும் கப்பலிலிருந்து சிலரையே காப்பாற்ற முடியும் என்கிற நிலையில் 'முதல் வகுப்புப் பெண்களுக்குத்தான் முன்னுரிமை' என்று முடிவெடுக்கும் போது, 'என்ன ஒரு அநியாயம்?' என்ற ஆக்ரோஷம் எழுகிறது.

அதனால்தான் டைடானிக் மூழ்கிய பிறகு கணிசமானவர்களின் உடல்கள் கடலில் மிதக்க, காப்பாற்றுவதற்காக வந்த படகில் இருப்பவர்கள், "யாராவது உயிரோடு இருந்தால் கையை அசைத்துத் தெரியப்படுத்துங்கள்" என்று கத்தியபடி துடுப்பால் பாதையில் எதிர்ப்படும் உடல்களைத் தள்ளியபடி முன்னேறும்போது சோகம் உண்டாகிறது.

ஏலியன்ஸ், டெர்மினேட்டர் - 2, ட்ரு லைஸ், இப்போது டைடானிக் – இயக்குனர் கேமரூன் எங்கோ போய் விட்டார். முக்கியமாக நாயகன் நாயகி தேர்வு. குறும்பு கொப்பளிக்கும் ஓவியனாக லியனார்டோ கேப்ரியோவும், அழகும் சீமாட்டித்தனமும் கொண்டவளாக கேட் வின்ஸ்லெட்டும் கச்சிதம். (இவர்கள் காதலின் சில பின்னணிகள் சராசரி தமிழ் சினிமாவை நினைவுபடுத்துவது வேறு விஷயம்). இவர்கள் காதலை தொடக்கத்திலிருந்தே வெறுக்கும் கதாநாயகியின் அம்மா நடிகையும் கண்களிலேயே வெறுப்பின் தீவிரத்தை அருமையாக வெளிப்படுத்துகிறார்.

காதலன் இறப்பதும், காதலி பல வருடங்கள் கழித்து அதே கப்பலின் சிதிலங்களில் சென்று தனது பழைய காதலை எண்ணி உணர்ச்சிவசப்படுவதுமாக, ஒரு காதல் கதையை கவிதையாக நெய்திருக்கிறார் இயக்குனர். அதே சமயம் கப்பலின் முடிவை விட காதலின் முடிவு அழுத்தமாகப் பதிகிறது. இது படத்துக்கு வெற்றியா தோல்வியா?

இது ஒருபுறமிருக்க இசையமைப்பாளர், ஒளிப்பதிவாளர், (முக்கியமாக லைட்டிங்), செட் டைரக்டர் ஒவ்வொருவரின் கையும் உடைந்து போகும் அளவுக்குக் கைகுலுக்கத் தோன்றுகிறது. ●

— ஜி.

மார்ச் 18 முதல் 24 வரை



# நடக்குமென்பார், நடக்கும்!

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கொஞ்சம் சிரமமான வாரம்தான். அலைச்சல் காரணமா, உடல் நலன் லேசா பாதிக்கப்படலாம். வேளைக்கு ஒழுங்கா சாப்பிடுங்க. சிலருக்கு வயிற்றுக் கோளாறுகள் ஏதாவது வரலாம். சின்ன விபத்துக்குக் கூட வாய்ப்பு இருக்கு. வண்டில போறவங்க கவனமா இருங்க. இதெல்லாம் வெள்ளிக்கிழமைக்கப்புறம் தான். வாரத் தொடக்கத்துல கிரகங்கள் சாதகமாத்தான் இருக்கு. பக்தி மார்க்கத்துல மனசு போகும். சிலருக்குப் புண்ணியத் தலங்களுக்குப் போற யோகம் கூட உண்டு. பண விஷயம் இந்த வாரம் அத்தனை நல்லா இருக்காது. கொஞ்சம் இழுபறியாத்தான் இருக்கும். அநாவசிய செலவுகளைக் குறைங்க. ஊர் சுத்தாதீங்க. முக்கியமான விஷயம், குடும்பத்துல மத்தவங்களை அனுசரிச்சி நடந்துக்கங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

மொத்தத்துல இது கொஞ்சம் கஷ்டமான பீரியட்னாலும் இந்த வாரம் 9லயும் 11லயும் இருக்கற கிரகங்களோட பலத்தால, உங்களுக்குப் பிரச்னை ஒண்ணும் பெரிசா இல்லை. சொல்லப் போனா, பேரும் புகழும் கூடற வாரம் இது! மேலதிகாரிகள் பாராட்டு, திடீர் பண வரவு, உல்லாச உலான்னு என்னலாம் செய்யப் போறீங்க. சில பேருக்கு வெளியூர் பயண யோகமும் இருக்கும். பண விஷயத்துலயும் அதிக பிரச்னை இருக்காது. ஆபீஸ்ல உங்க கீழ வேலை பார்க்கறவங்க அனுசரிச்சுப் போவாங்க. முயற்சிகள் வெற்றியடையும். எழுத்துத் துறைல இருக்கறவங்க, கொஞ்ச நாளா தள்ளிப் போட்டுட்டு வந்த காரியங்களை இப்ப எடுத்துச் செஞ்சா, வெற்றி நிச்சயம்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

குருவும் செவ்வாயும் உங்க தோஸ்தா இருக்கும் போது என்னங்க கவலை? உங்க மதிப்பு ஓகோன்னு உயரப் போற நேரம் இது. பெண்கள் பத்திக் கேக்கவே வேணாம். இது அம்மணிகளோட வாரம்! சொல்வன்மை, செயல் திறன் மேலோங்கி இருக்கும். சில சுப காரியங்கள் வேற செய்யப் போறீங்க. புதிய ஆடை, நகைகள் வாங்கற யோகம் சிலருக்கு இருக்கும்! வெளியூர் லேருந்து ஏதாவது நல்ல செய்தி வரும். குடும்பத்துல மகிழ்ச்சிக்குக் குறைவே கிடையாது. உடல் நலமும் நல்லா இருக்கும். காம்ப்ளான் பாய் மாதிரி உற்சாகமா இருப்பீங்க. குறிப்பா, கலைத் துறைல இருக்கறவங்களுக்குப் புதிய வாய்ப்புகள் மூலம், உற்சாகம் டபுள் மடங்காகும்!



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

நீங்க என்னதான் அனுசரிச்சிப் போனாலும் குடும்பத்துல மத்தவங்க பிரச்னை குடுத்தா, பாவம், நீங்க என்னதான் செய்வீங்க? பல்லைக் கடிச்சிட்டு சைலண்டா இருந்திருங்க. இப்ப கிரக நிலை கொஞ்சம் சரியா இல்லை. எதுலயும் பிரச்னை, சிக்கல்! ஆபீஸ்ல கூட மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாக வேண்டி வரலாம்! நண்பர்கள் கிட்டயும் ஜாக்கிரதையாக இருங்க. கூட இருந்தே குழி பறிக்கிறவங்களை அடையாளம் கண்டு விலக்குங்க. இந்த வாரம் ஏகமா மனக்குழப்பம் இருக்கும். அதனால சிலருக்கு பிரஷர், அல்சர் மாதிரியான உபாதைகள் வரலாம்! கவனம்!



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

எந்தக் காரியத்தை ஆரம்பிச்சாலும் தள்ளிப் போயிட்டே இருக்குதேன்னு கவலையா? விடுங்க. இப்ப உங்க நேரம் அப்படி! குடும்பத்துல கூட சின்னச் சின்ன மனஸ்தாபங்கள், பிரச்னைகள் வரலாம்! எல்லாரையும் அனுசரிச்சி நடந்துக்கங்க, இன்னொரு விஷயம். வீட்டுல இருக்கற பெண்கள், மின்சாரம், காஸ் அடுப்பு இந்த மாதிரி விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. சிறு விபத்து அல்லது காயம் உண்டாகலாம். வீடு கிடு வாங்கற யோசனை இருந்தா கொஞ்சம் தள்ளிப் போடுங்க. பத்திரிகை, எழுத்துத் துறைல இருக்கறவங்களைத் தவிர மத்த யாருக்கும் இந்த வாரம் சாதகமா இல்லை.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

உங்ககிட்ட திறமைக்குப் பஞ்சமில்லைதான். ஆனா ரொம்பக் கஷ்டப்பட்டு உழைச்சாத்தான் பலன்! இது ஆபீஸ்ல மட்டுமில்லை. வீட்டுலயும் சரி; படிக்கிற பசங்களுக்கும் சரி! கொஞ்சம் கஷ்டப்பட்டுச் செயல்பட வேண்டிய நேரம் இது. விஞ்ஞானம், மருத்துவம் போன்ற துறைல இருக்கறவங்களுக்கு முன்னேற்றமான வாரம் இது. உற்சாகமா முன்னேறுவீங்க. வயசானவங்களுக்குப் புண்ணிய க்ஷேத்திரப் பயணம் கைகூடும். வெளிநாட்டுலேருந்து ஏதாவது நல்ல செய்தி

வரலாம். பிரச்னை தராத பொருளாதார நிலைமைக்கு கேரண்டி! என்ன ஒண்ணு, உடல் நலத்துல கொஞ்சம் கவனமா இருங்க.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

கல்யாணத்துக்குக் காத்திருக்கிற பெண்களுக்கு இந்த வாரம், வரன் கூடி வரும்! நேரம் அப்படி! அது மட்டுமில்லை. பட்சி சிக்குமான்னு லேடீஸ் காலேஜ் வாசல்ல தவமிருக்கற பையன்களுக்கும் காதல் ஜோடி கிடைக்கலாம்! இந்த வாரம் மனசுக்கு மகிழ்ச்சி தரும் காரியங்கள் மூணு நாலு நடக்கலாம். அடுத்த ஒரு மாசத்துக்கு உற்சாகமா வேலை செய்ய இப்ப பூஸ்ட் கிடைக்கும்! பண வரவு, நினைச்ச காரியம் தடையில்லாம முடியறது, மேலதிகாரிகள் ஆதரவு – எல்லாமே உண்டு! சிலபேருக்கு உத்யோக ரீதில நல்ல இடமாறுதல் இருக்கும். பயணங்களும் இருக்கும். வராத விருந்தாளிங்க யாராவது வருவாங்க, பாருங்க!



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சுக்ரன் உங்க பக்கம் நிக்கறான். ஷோ, சினிமா, கலைத்துறைல இருக்கறவங்க ஓஹோன்னு முன்னேறுவாங்க. எக்ஸ்போர்ட் பிஸினஸ் பண்றவங்களும் லாபம் பெறும் சமயம் இது. நிர்வாகம், ரசாயனத்துறையைச் சேர்ந்தவங்களுக்கு பாராட்டும் புகழும் உறுதி. வீட்டுல பிரச்னை அதிகம் இல்லாம ஸ்மூத்தான உறவு நிலை தொடரும். எதிர்பார்க்கிறதெல்லாம் நடக்கற யோகம் பெண்களுக்கு மட்டும் இருக்கு. உங்களோட நீண்ட நாள் ஆசைகளை இப்ப நிறைவேத்திக்கலாம். அது காஞ்சீபுரம் பட்டுப் புடைவையாவும் இருக்கலாம். காஷ்மீருக்கு ஹனிமூனாவும் இருக்கலாம்! பயணத்துல மட்டும் கவனமா இருங்க. விபத்துகள் ஜாக்கிரதை!

**விருச்சிக ராசிக்கரரான சித்துவின் பக்கம் சுக்ரன் இருக்கறதால ஓஹோன்னு முன்னேறு வாராம்!**



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

சனி, செவ்வாய், சூரியன் – மூணு கிரகமும் உங்களுக்கு சாதகமா இல்லை. அதனால எதுலயும் ரொம்ப எச்சரிக்கையா இருங்க. எந்தக் காரியத்துலயும் தடைகள் வரும். போறாத குறைக்கு நீங்களே வேற குழப்பத்துல ஏகமா சொதப்புவீங்க. ஆனா கக்



ரனும் கேதுவும் கொஞ்சம் சாதகமா இருக்கறதால, வீட்டுல கொஞ்சம் சுமுகமான நிலைமை இருக்கும். விசேஷங்களும் வரலாம். சினிமா, மியூசிக் துறைல இருக்கறவங்களுக்கு வளர்ச்சியான காலகட்டம். பண வரவுக்குக் குறைவிருக்காது. ஆனா, ஷேர் மாதிரி முதலீடெல்லாம் இப்ப வேணாம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நீங்க நினைக்கறதெல்லாம் நடக்கற வாரம். காரணம், அத்தனை கிரகங்களும் உங்களுக்கு சப்போர்ட் பண்ணுது. குதூகலமான குடும்பச் சூழ்நிலை, தாராளமான பணப் புழக்கம், புகழ், அந்தஸ்து. போதாதா? சும்மா பிச்சி உதறுங்க. இந்த வாரம் இந்த ராசிக்காரங்கள்ல பல பேச்சிலர்ஸ், அந்தப் பெருமையை இழக்க ஏற்பாடு நடக்கும்! சில பேருக்கு குழந்தைப் பேறும் கிடைக்கலாம். வெளியூர் பயணங்கள் இருக்கும். வேலை இல்லாதவங்களுக்கு ஆர்டர் வரக்கூடிய சமயம் இது! சிலருக்கு வாகன யோகமும் உண்டு. புகுந்து விளையாடுங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

நீங்க எப்பவும் எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம்! அநாவசியமா அடுத்தவங்க மனசு புண் படறாப்பல பேசாதீங்க. அன்பாவும் அனுசரணையாவும் நடந்துக்கிட்டீங்கன்னா வீட்டுல பிரச்னை வராது. நல்ல வாய்ப்புகள் வரும் போது மறுக்காதீங்க. உங்க திறமையை சோம்பேறித்தனத்தால மூடி வைக்காதீங்க. இந்த வாரம் கவனமா பார்த்து செலவு செய்யுங்க. கண்ட செலவுகளுக்கு நிறைய சான்ஸ் வரும். கொஞ்சம் ஏமாந்தீங்கன்னா, பின்னால பணக் கஷ்டம் ரொம்ப பெரிசா பயமுறுத்தும். பீ கேர்ஃபுல்!



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உடல் நலத்துல அலட்சியம் வேணாம் சார்! இப்ப கொஞ்சம் டயம் சரியில்லை. ஒண்ணுமில்லாததெல்லாம் பூதமா தெரியும். உங்க காரியங்கள் கூட திட்டமிட்டபடி நடக்காம தள்ளிப் போகும். பண இழப்பு இருக்கும். பிக்பாக்கெட் ஜாக்கிரதை! அநாவசிய மனக் குழப்பத்துக்கு இடம் கொடுக்காதீங்க. அரசியல்வாதிகளுக்கு இது ரொம்ப சோதனையான காலகட்டம். எதிரிகள் கை ஓங்கி இருக்கும். கவுக்கக் காத்திருப்பாங்க. ஸோ, ரொம்ப ஜாக்கிரதையா இருங்க.

# குறையொன்றுமில்லை

துரோணாசார்யரைக் கொல்ல வேண்டும்... ஆனால் அவரோ சரமாரியாக சரத்தை வர்ஷிக்கிறார்! எவ்வளவோ ரக்ஷகனாக இருந்தபோதும் பகவானால் அவருடைய பாணத்துக்கு ஈடுகொடுக்க முடியவில்லை... அதனால் பரமாத்மா என்ன பண்ணினான்...?

சற்று விச்ராந்தி கிடைத்த நேரத்தில் நேரே இறங்கி, துரோணாசார்யாரிடமே போனான். அவரிடமே போய், 'உம்மை எப்பொழுது அடிக்க முடியும்...?' என்று கேட்டான்!

அவர் எவ்வளவு சத்யசந்தர் பாருங்கள்...! "என் கையிலே ஆயுதங்கள் இருக்கிறவரையில் என்னை யாராலும் அசைக்க முடியாது; யாராலும் அடிக்க முடியாது... அஸ்திரத்தை, ஆயுதத்தைக் கீழே போட்டுவிட்டேனானால் என்னை அடிக்க முடியுமேயொழிய, என் கையில் இருக்கிற வரையில் என்னை ஒருத்தராலும் அடிக்க முடியாது" என்றார்.

"அடுலனா...?" என்றார் பகவான் தெலுங்கிலே!

'அடுலனா...?' என்றால் 'அப்படியா?' என்று அர்த்தம். 'அடுலனா?' என்று கேட்டுவிட்டுத் தலையைச் சொரிந்து கொண்டே வந்தானாம், பகவான்..!

கொஞ்சம் தூரம் வந்துவிட்டவன் மறுபடியும் திரும்பிப் போனான்! போய் இரண்டாவது கேள்வி கேட்டான்:

"சுவாமி! ஆயுதங்கள் இருக்கிற வரையில் உம்மை யாரும் அடிக்க முடியாது என்று சொன்னீர்... ஆயுதங்களை நீர் எப்போது கீழே போடுவீர்...?"

– இவனுக்கு ஒன்றுமே தெரியாத மாதிரி அவரைக் கேட்கிறான். எதற்காகக் கேட்கிறான்...? அவர் எவ்வளவு சத்ய சந்தர் என்பதை உலகத்துக்குக் காட்ட! துரோணாசார்யார் எவ்வளவு உண்மையானவர் என்பதை உலகத்துக்குக் காட்டுவதற்கேயொழிய பரமாத்மாவுக்கு அது தெரியாமல் போகுமா...?

அவரும் பதில் சொல்கிறார்:

"என்னால் தான முடியாத, ரொம்பவும் சகிக்க முடியாத துக்கமான விஷயத்தை நான் ச்ரவணம் பண்ணினால் (காதால் கேட்டால்) இந்த ஆயுதத்தைக் கீழே போட்டு விடுவேன். அதுவரைக்கும் அசைக்க முடியாது!"

"ஓஹோ! அடுலனா...!" என்றார்.

அந்த 'ஓஹோ' சொன்னபோதே துரோணரின் முடிவு உறுதியாகிவிட்டது!

பகவான், திரும்பி அர்ஜுனனிடம் போனானா என்றால், இல்லை! தர்ம புத்திரரிடம் புறப்பட்டுப் போனான் அவன் போய், "தர்மநந்தனா! நீ ஒரு பொய் சொல்ல வேண்டும்..." என்றான்.

அவர் பார்த்தார்... "பொய் சொல்லக் கூடாது என்று லோகமெல்லாம் சொல்கிறது. நீயும் சொல்கிறாய்... என்னைப் போய் பொய் சொல்லச் சொல்கிறாயே! இது பால்யமா? நான் சொல்ல மாட்டேன்... நீயே சொன்னாலும் நான் சொல்லமாட்டேன்!"

அதற்கும் மேல் சொல்கிறார் அவர்:

"நீ பொய் சொன்னால் அது உனக்கு 'குணம்' ஆகிறது. நாங்களெல்லாம் பொய் சொன்னால் அது குணமாகுமா?"

பகவான் பொய் சொன்னால் அதை குணமாக வைத்துப் பேசுகிறோம். அவன் திருடினால் அது அவனுக்கு குணமாகப் போய்விடுகிறது!

ஒரு வீட்டிலேயிருந்து ஒருத்தர் வெள்ளிச் செம்பைத் திருடிக் கொண்டு வந்து விட்டார். இன்னொருத்தர் அவர் வீட்டுக்கு வந்தார். வந்தவர் அந்தச் செம்பைத் திருடிக் கொண்டு போய்விட்டார்! ஒருத்தரால் திருடப்பட்ட வஸ்து திருடப்படலாம்! அவர் அந்த வீட்டிலிருந்து வெள்ளிச் செம்பைத் திருடினார் என்று சொன்னால், அந்தத் திருட்டுத் தன்மை திருடுமோ...?! திருடாது!

ஆனால், என்ன ஆச்சர்யம்! இந்த வாசுதேவன் வெண்ணெயைத் திருடினான் என்று சொன்னோமானால் நம்மிடத்தில் இருக்கிற பாபத்தையெல்லாம் அது திருடுகிறதே! பொய்யும் பகவானை ஆச்ரயித்துப் பெருமை அடைந்தது.

'ஏலா பொய்கள் உரைப்பானை'

என்றெல்லாம் கொண்டாடுகிறோம். பொய்யும் களவும் அவனிடம் வைத்துக் கொண்டிருக்கிறானே என்று நாமும் அவற்றைச் சேர்த்துக் கொண்டோமானால் நமக்குப் பெருமை ஏற்படுமா...? அவற்றால் நமக்குச் சிறுமைதான்!

பொய்யும் களவுமே அவன் திருவடியைச் சரணடைந்ததே என்று நாமும் அடைய வேண்டாமா..? அதுதானே நமக்குப் பெருமை!

**அ**தனால்தான் தர்மபுத்திரர் சொன்னார்: "நீ பொய் பேசினால் பரவாயில்லை... நான் பேசலாமா?" என்றார்.

பார்த்தார் பகவான்- 'இவர் சத்ய சந்தர்; பொய் பேச மாட்டார். அதனால் ஒன்று செய்யலாம்...' என்று திடீரென்று முடிவெடுத்து ஒரு யானையைப் பிடித்துக் கொண்டு வரச் சொன்னார்.

அந்த குருக்ஷேத்ர பூமியிலே ஒரு யானையைப் பிடித்துக் கொண்டு வந்து, அந்த யானைக்கு நாமகரண மஹோத்ஸவம் நடக்கிறது- அந்த தர்மபுத்திரர் எதிரிலேயே நடக்கிறது! என்னவென்று நாமகரணம்...? 'அச்வத்தாமா!' அந்த யானைக்கு அச்வத்தாமா என்று பெயர் வைத்து விட்டார்கள்.

தர்மபுத்திரரைப் பார்த்து பகவான் கேட்கிறான்: "இந்த யானைக்குப் பெயர் என்ன..?"

"அச்வத்தாமா! - அது தானே நீ வைத்தாய்?"

"இப்போது இந்த யானை, பாணத்தினாலே அடிபட்டு மாண்டு போய்விட்டதென்று வைத்துக் கொள், 'அது மாண்டு விட்டது' என்று நீ சொல்லுவாயா...?"

"அது மாண்டு போனால் கட்டாயம் சொல்லுவேன்..."

"பெருங்குரலில் சொல்ல வேண்டும்..."

"சொல்லுவேன்..."

"எப்படிச் சொல்லுவாய்...? சொல்லிக் காட்டு!"

பெரிதாக, உரத்த குரலில் சொல்லிக் காட்டினார் தர்மபுத்திரர்: 'அச்வத்தாமா என்ற யானை இருந்தது, பாரதப் போரிலே, குருக்ஷேத்திர காலத்திலே, அந்த யானை அடிபட்டு விழுந்து மாண்டது...' என்று விரிவாகச் சொன்னார்!

பகவான் பார்த்தான்... "இது சரியில்லை... சுருக்கமாகச் சொல்ல வேண்டும். உன் உபன்யாசத்தை யார் கேட்டார்கள்..." என்றான். "எது முக்கியமோ, அதை மட்டுமே விடாமல் சொல்ல வேண்டும்... இங்கே யுத்தம் நடப்பதையும், நாமகரணம் பண்ணியதையும் சொல்லத் தேவையில்லை. நான் சூத்ரப்ராயமாகச் சொல்கிறேன், கேளு..." என்று சொல்லிக் காட்டினார்:

"அச்வத்தாமா ஹத: குஞ்சர:"

பதத்தைக் காட்டிலும் அர்த்தக்கிரமம் உயர்ந்தது என்பார்கள்.

இந்தப் பதத்தில் குஞ்சர சப்தம் பின்னாலிருக்கிறது; அச்வத்தாமா முன்னால் இருக்கிறது. இதைக் கிரமமாகக் கொண்டு வந்தால், அச்வத்தாமா என்னும் யானை மாண்டது என்று அர்த்தம் ஏற்படும். ஆகையினாலே

'அச்வத்தாமா ஹத: குஞ்சர:' என்று சொல்லச் சொன்னான்.

தர்மபுத்திரனும் 'சரி' என்று சொல்லி விட்டார்.

**பா**ரதப் போரின் போது இந்த வாசகத்தை பகவான் தானே சொல்லியிருக்கலாமல்லவா...? தன்னுடைய குரலிலேயே சொல்லியிருக்கலாமில்லையா...?

இவர் சொன்னால் அவர் கேட்க மாட்டார்!



**"அந்த ஆள் புதுப்பணக்காரரா?"**
**"ஆமா. எப்படி கண்டுபிடிச்சீங்க?"**
**"கண்ணுல தூசி விழுந்துடுச்சு. வாக்குவம் கிளீனரை வெச்சு எடுக்கணும்னு சொல்லிட்டுப் போறாரே."**
**– தாரை மா. மகேஷ்ப்ரியன்**

## அருள்வாக்கு



ஸௌக்யம் என்று போய்க் கஷ்டத்தில் விழுகிறோம். ஸந்தோஷம் தருவது என்று நினைத்து ஆசையை வளர்த்துக் கொண்டு அதனாலேயே துக்கத்தை அடைகிறோம். இங்கேயும் ஆசை நிறைவேறாவிட்டால்தான் துக்கம் என்றில்லை; ஆசையின் நிறைவேற்றத்தாலேயும் துக்கம்தான். எப்படியென்றால் ஆசை நிறைவேற்றத்தால் எதைப் பெற்றோமோ, அது கையை விட்டுப் போய்விடப் போகிறதே என்று துக்கம். அதோடு பயம். இந்த பயம் நிஜமாயும் ஆகிவிடுகிறது. நமக்குக் கிட்டிய ஆசை வஸ்து நம்மை விட்டுப் போய் விடுகிறது. ப்ரியமானவர் செத்துப் போகிறார்; பணத்தைத் திருடன் கொண்டுபோகிறான், அல்லது பாங்கு முழுகிப் போகிறது, அல்லது நமக்குத் திருட்டுப் போனதாக நேரே தெரியாவிட்டாலும் பண வீக்கத்தில் அதன் மதிப்புக் குறைந்து, 'ஐயோ! வீடு வாங்கலாம், கல்யாணம் பண்ணலாமென்று வயிற்றைக் கட்டி வாயைக்கட்டி மீத்தினோம்; இப்போது பார்த்தால் இந்த ஸேவிங்ஸ் க்ரவுண்ட் வாங்கக்கூட போதவில்லையே, வரதக்ஷிணைக்குக்கூடப் போதவில்லையே!' என்று துக்கிக்கும்படி ஏற்படுகிறது.

ஸந்தோஷம் தரும் என்று தான் ஒன்றுக்கு ஆசைப்படுகிறோமென்றாலும் அதை அடைவதற்கே வேறு எத்தனையோ கஷ்டப்பட வேண்டியதாகிறது. ஸினிமா பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானால் எத்தனையோ நாழி 'க்யூ'வில் கால் வலிக்க நிற்க வேண்டியிருக்கிறது. அப்புறம் ஒரே புழுக்கத்தில் கண்ணை எரியவைக்கிற வெளிச்சத்தோடு, காதைத் துளைக்கிற சப்தத்தோடு ஓடுகிற ஸினிமாவைப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதனால் தலைவலியும் கண்ணெரிச்சலும் உண்டாகின்றன. கிரிக்கெட் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமானால் முதல் நாள் ராத்ரியே அங்கே போய்ப் பனியில் படுத்துக் கொண்டு, பட்டினி கிட்டினி பார்க்காமல் அவதிப்பட்டுக் கொண்டுதான் இடம் பிடிக்க வேண்டியிருக்கிறது என்கிறார்கள். இப்படித்தான் எதற்கு ஆசைப்பட்டாலும் அது கிடைப்பதற்குக் கலியாகக் கஷ்டம் ஏதாவது படும்படியே இருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

யார் கேட்க மாட்டார்...?

துரோணாசார்யர் கேட்க மாட்டார்! ஏனென்றால் இவன் ஒரு பொய்யன் என்பது தெரியும்! வாசுதேவன் சொன்னால் பொய்யாகும் என்பது தெரிந்ததனாலே தகுந்த ஆளை பகவான் தேர்ந்தெடுக்கிறான்.

எந்த சமயத்திலே, எந்த இடத்திலே, எந்தக் காலத்திலே, யார் சொன்னால் நடக்குமோ அப்படிப்பட்ட மகான்களை அவனே தேர்ந்தெடுக்கிறான்.

கிருஷ்ணன், தான் சொல்லாமல் இருந்துவிட்டு, அர்ஜுனனைத் தேர்ந்தெடுக்கலாம்... ஆனால் அவன் தர்ம புத்திரனைத்தான் தேர்ந்தெடுக்கிறான். ஏனென்றால் பொய்யே கிடையாது அவரிடம். தர்மபுத்திரர்; தர்மநந்தனர் அவர்! அந்த யம தர்ம ராஜாவின் புதல்வர் அவர். அவர் சொன்னால் உலகம் நம்பும் என்பதற்காக அவரைத் தேர்ந்தெடுக்கிறான்.

யானையை அடிக்க வைத்தான் பரமாத்மா.

அர்ஜுனனுடைய தேர்த் தட்டிலேயிருந்து தர்மபுத்திரரைப் பார்த்து 'கத்து' என்று ஜாடை பண்ணினான்.

அவரும் "அச்வத்தாமா ஹத: குஞ்சர:" என்று பெருங் குரலில் கத்தினார்.

'அச்வத்தாமா ஹத:' என்கிற இரண்டு பதமும் நன்கு கேட்கும்படியாக அந்த சமர்க்களத்தையே நிசப்தமாக்கினான் பரமாத்மா. வேறு ஒரு சப்தம் கிடையாது! இது மட்டும் நன்றாக ஒலிக்கும்படி பண்ணிவிட்டான்.

'குஞ்சர:'-யானை-என்கிற சப்தம் இருக்கு பாருங்கள்... அது காதிலே விழாதபடி சங்கை எடுத்து 'பம்பம்பம்' என்று சங்கநாதம் எழுப்பிவிட்டான்!

'அச்வத்தாமா மாண்டுபோனான்' என்றவுடனே துரோணாசார்யர் 'ஹா புத்ரா!' என்று ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டார்!

(தொடரும்)

செல்லாண்டியா இப்படிச் செய்து விட்டான்? அவனால் எப்படி முடிந்தது? எல்லோருடைய மனசையும் இந்தக் கேள்விதான் அலைக் கழித்தது.

அலர்மேலு விழியை அசைக்காது உட்கார்ந்திருந்தாள். நீளும் இருளையே குத்திட்டாற் போல் பார்த்துக் கொண்டிருந்தால், மனசு எங்கோ போய்விடுகிறது. மூன்று மாத காலம் இந்த வீட்டில் பகலில்லை, இருள் தான். கண்களைக் கசக்கிப் பிழிகின்ற இருள். எப்போதாவது வாசலுக்கு வரும் போதுதான்



# ஒருவரும் ஓர் வீடும்

**பாரதிபாலன்**

வெளிச்சம் தட்டுப்படுகிறது. இருப்பினும் அலர்மேலு வாசலைப் பார்த்தே உட்கார்ந் திருந்தாள்.

கிழக்குத் தெருவில் 'நவ்வாப் பழம்... நவ்வாப்பழம்...' என்று தேய்ந்த குரல். இப்போதெல்லாம் இந்தத் தெருவிற்கு வரும் போது எல்லாக் குரலுக்கும் குறுக்கொடிந்து போய்விடுகிறது. அதுவும் இந்த மூன்று மாத மாகத்தான். ஐயா வீட்டில் இருக்கும் போது எத்தனையோ குரல்கள். எல்லாம் ஐயா வுக்காக ஒலித்த மாதிரிதான் தெரிகிறது. வாசலில் கோலமிடும்போது ராகத் தேவர்... "தே... தே..." என்று மாடுகளை ஓட்டிப் போகும் குரல். அடுத்துப் பால்காரன் குரல். காலைப் பலகாரம் முடிந்து, வீடு ஒழிந்த உடன் பல குரல்கள். ஒவ் வொரு குரலுக்கும் ஒரு குணம்.

"பாத்திரங் களுக்குப் பேர் வெட்டுறது. ஓட்டை உடைசல் அடைக்கிறதே..." என்று ஒரு குரல். 'அம்மி குத்தலையே ஆட்டொரல் குத் தலையோ' என்று எப்பவாவது வரும் குரல். "நவ்வாப்பழம்... நவ்வாப்பழம்' என்றோ.... "கொய்யாப் பழம்... கொய்யாப்பழம்" என்றோ கொழ கொழக்கும் குரல். பதினோரு மணிக்கு, மணி அய்யரின் குரல்தான் தெரு வைக் கூட்டும். 'ஜிலேபி... ஜிலேபி...' என்று தகர டப்பாவை இடுப்பில் கஞக்கி நடக்கும் அழகே தனி. அவரைப் பார்த்துப் பரிகாசம் பண்ணும் வாண்டுகளின் குரல். இப்படி எத் தனையோ குரல்கள். எல்லாம் ஐயாவுக் காகவே ஒலித்தது போல இருக்கிறது. இப் போது தெருவே நிசப்தம்.

ஐயா திண்ணையில் உட்கார்ந்து இருக் கும் அழகே தனி. அகலமான திண்ணை. இரட்டைத் திண்ணை. வலமும் இடமும் அகன்ற விசாலமான திண்ணைகள். ஐயா இடது பக்கத் திண்ணையில்தான் உட்கார்ந்து இருப்பார். ஜிலு ஜிலுவென்று காற்று அலசும். வெயிலே ஏறாது. எப்போதும் குளுமைதான். தெருக் கோடி வீடு அது. இடது பக்கம் திரும்பினால் மற்றொரு வீடு. திண்ணையில் இருந்து பார்த்தால் தோட்டம் தெரியும். ஐயாவின் தோட்டம். எல்லாம் வாழை, தென்னை, புளி என்று வைத்துக் காசு பார்த்துக் கொண் டிருக்கும் போது.

ஐயா மட்டும் பன்னீர், பூவரசு, நாக லிங்கப்பூ மரம் என்று வைத்து அழகு பார்த்துக் கொண்டிருந்தார்.

வேலி மர இலைகளுக்கிடையே உட்கார்ந்திருக்கும் மஞ்சளரளி, செவ்வரளி, பூசணிப் பூ, எல்லாம் குருத்து விட்டு தலைவிசி ஐயாவைப் பார்த்துப் பணிவு காட்டும்.

வலது பக்கத் திண்ணை, குருவிகள் கூடு கட்டுவதற்கும்... அணில் பிள்ளைகள் அலை வதற்கும். அணில் பிள்ளைகள் ஒன்றை யொன்று துரத்திக் கொண்டு ஓடுகிற அழகை விட அதை ரசிக்கின்ற ஐயாவின் அழகே தனி. பட்டைக் கரை வேஷ்டி. சட்டை அணியாத வெற்றுடம்பு. கொழு கொழு வென்ற உடம்பில் மினு மினுக்கின்ற திரு நீற்றுக் கீற்று. காற்று மோதியதும் உதிரும் திருநீற்றுப் பொறி. தெருவில் எத்தனையோ பேர் போகிறார்கள், வருகிறார்கள். எல்லோ ரையும் பார்த்து முகத்தில் மலர்ச்சி காட்டு கிறோம். நின்று கைபிடித்துச் சிரிக்கிறோம். ஐயா அப்படி இல்லை. அவருக்கு எல்லோ ரிடமும் சிநேகம். யாரையும் நிறுத்திப் பேச மாட்டார். விழுந்து சிரிப்பதில்லை. 'சௌக் கியமா' என்று கொக்கி போடுவதில்லை. இருப்பினும் எல்லோரிடமும் பிரியத்தைப் பங்கிட்டுக் கொள்வார். யார் எது பேசினா லும், எப்படிப் பேசினாலும் காதில் வாங்கிக் கொண்டு, கண்ணில் சிரிப்பார். கன்னத்துச் சதை மேலேறி கண்ணருகில் கூடுகின்றபோது ஒரு தனிக் களை. எங்கிருந்தோ அப்படி ஒரு களை வந்து கூடிவிடுகிறது. இந்தக் களையும்,

இந்த அழகும் அவர் மனசு. ஐயா வெள்ளை என்பதை வர்ணம் போட்டுச் சொல்ல வேண்டியதில்லை.

"யேய்! பாப்பா. நவ்வாப் பழம் வந்திருக்கு, வாங்குறீயா?"

"நேற்றுத் தானே வாங்கினோம்."

"இன்னைக்கு ஒரு கால்படி வாங்கேன்."

"வாங்குமா, அணில் பிள்ளைகளுக்குப் போடலாம்."

உடனே நாவல் பழக் கூடைக்காரி கூடையை இறக்கி விடுவாள். இறக்கியதும் 'உஸ்.. யப்பாடா..." என்று முந்தாணையால் முகம் துடைப்பாள். "பாப்பா ஒரு செம்பு தண்ணி கொண்டா தாயி" என்று வாசல் பார்த்துக் கூவுவான். தண்ணீர் மட்டும் கொடுத்தால் ஐயாவுக்குப் போதாது. ஒரு



"ஏம்பா டாலர் நோட்டு அச்சடித்தாய்?"
"இந்திய ரூபாய்க்குத்தான் மதிப்பு ரொம்ப குறைஞ்சு போச்சே எசமான்!"
— எஸ். மோகன்

செம்பு கடைந்த மோர் கொடுக்க வேண்டும். அவன் தாகமும் தவிப்புமாய்ச் செம்பு தூக்கி 'கடக் கடக்' என்று குடிப்பதைப் பார்த்த வுடன்தான் ஐயாவுக்கு மனசு நிறையும்.

"செல்லாண்டிக்கு ஒரு கால் படி."

"வேணாம் ஐயா..."

"வாங்கு, சாப்பிடுவே..."

"சரி. ஐயா சொல்லியாச்சு. காப்படி போடு..."

செல்லாண்டி இரண்டு கைகளையும் குவித்து, முறம் மாதிரி நீட்டுவான். செல் லாண்டி ஐயாவின் நிழல். வயலுக்கு நீர் பாய்ச்சுவது, கவணை அடைப்பது. பாளை சீவுவது, கீற்று முடைவது, காய்கறிகள் வாங்கி வருவது. கொல்லையைச் சுத்தம் பண்ணு வது... இதையெல்லாம் பண்ண இப்போது உடம்பு ஒத்துக் கொள்ளவில்லை. ஐயாவின் தோட்டத்துக் குடிசையில் இருந்து விலகி, ஊருக்குள் வந்து விட்டான். இப்போது காலனியில் ஒரு குடிசை. வேலை வெட்டி என்று எதுவுமில்லை. இருந்தாலும் வருஷா வருஷம் ஐயாவின் கூலி நெல் வந்து இறங்கிக் கொண்டுதான் இருக்கிறது. இது ஐயாவின் மனசு. செல்லாண்டிக்கும் தினசரி ஐயாவைப் பார்க்க வேண்டும். ஏதோ ஐயாவைப் பார்த் தோம் ஐம்பமாகச் சாப்பாடு கீப்பாடு முடித் துக் கிளம்பினோம் என்றில்லை. ஐயா கூடவே இருப்பான். அப்படி இருப்பதில் ஒரு சந்தோஷம்! வயிறு நிறைஞ்சாப் போதுமா? மனசு நிறைய வேண்டாமா?

**வா**சலில் நிழலாடியது. அலர்மேலு தலையை உயர்த்திப் பார்த்தாள். நாவல் பழம் விற்கிறவள் மெல்லத் தலைச் சுமையை இறக்கி வலப்பக்கத் திண்ணையில் வைத் தாள். 'பாப்பா' என்று மெல்லக் கூவினாள். நடுங்கும் குரல். அக்குரல் அலர்மேலுவை எட்டவில்லை. மீண்டும் தலையை மட்டும் உயர்த்திக் கூவினாள். பார்த்ததும் விசுக் கென்று ஒருமுறை விசும்பிவிட்டு முகத்தை மூடிக் கொண்டாள். அலர்மேலு பேயறைந் தாற் போல் நின்றாள். இந்த மூன்று மாதத் தில் இப்போதுதான் அலர்மேலு திண் ணைக்கு வருகிறாள். ஐயா இல்லாத திண் ணையைப் பார்க்கச் சகிக்கவில்லை. திண்ணை மட்டுமல்ல, தெருவே அப்படித் தான் இருந்தது. இடது பக்கத் திண்ணையை ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டுப் பொதாக அழக்கிளம்பி விட்டாள். சட் டென்று தண்டட்டி ஆட, தலையசைத்துக் கொண்டே தேம்பினாள். உதட்டில் விரலை வைத்துப் பேசாமல் இருக்கும்படி ஜாடை காட்டினாள் அலர்மேலு.

"அட, நீசப்பயலே..."

"ப்சு."

"மனசு கேக்கலை தாயி. இந்த ஊர்லெ இனி மழை பெய்யுமா?"

"வேண்டாம். எதுவும் பேச வேண்டாம்."

"கேக்கலை தாயி. மனசு கேக்கலை. நான் நவ்வாப் பழம் விக்கிறவதான். எனக்கும் மனசு இருக்கு. இப்படியும் ஒரு மனுஷப் பிறவியான்னு 'சை'ன்னு வந்துடுச்சு" என்று காறித் தெருவில் உமிழ்ந்தாள்.

"மோர் குடி."

சட்டென்று அலர்மேலுவின் கையை எடுத்து, நெஞ்சில் வைத்துக் கொண்டாள். "இதுக்கெல்லாம் அலாதியான மனசு

வேணும் தாயி. பட்டுனு எல்லோருக்கும் சொல்ல வராது. தன் வலியைத் தாங்கிக் கிட்டு, அடுத்தவங்களைத் தடவிக் கொடுக்க எல்லோராலெயும் முடியாது. அப்படியே உனக்கு ஐயா மனசு தாயி. மல்லிகைப் பூ மனசு. இப்ப நான் சொல்றேன் தாயி, நான் வாழ்ந்துகெட்டவள். சொன்னாப் பலிக்கும். அவன் உருப்படவே மாட்டான். நாறப் பிண மாப் போவான். நீ வேணாப் பாறேன்...”

“வேண்டாம். அப்படி எல்லாம் பேச வேண்டாம்.”

“அவங்க முகத்தைப் பார்க்க எனக்குத் தெம்பு இல்லை.”

அவளால் பேச முடியவில்லை. கண்களில் தண்ணீர் தேங்கி விட்டது. சட்டென்று கூடையை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டு நடந்தாள். அலர்மேலு அந்த வெற்றுத் திண்ணையை நிதானமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, வீட்டிற்குள் சென்றாள்.

அன்று –

மதியம் மூன்று மணி இருக்கும். ஐயா பட்டாசாலையில் படுத்திருந்தார். கன்னென்று அடித்துக் கொண்டிருந்த வெயில் சட்டென்று தணிந்தது. மெல்லிய இருள் படர்ந்தது. விளக்கை அணைத்தது போல வீட்டிற்குள் இருள். கடகடவென்று எங்கோ வானம் உருண்டது. ஜில்லென்ற மழைக் காற்று. கூடவே மண் வாசனை. ஐயா அதை அனுபவித்துக் கொண்டே படுத்துக்கிடந்தார். தூக்கமில்லை. மயக்கம். மிதமான மயக்கம். அப்போது கொல்லைக் கதவு படக்கென்று திறந்தது. செல்லாண்டி வந்தான்.

“ஐயா’ – என்று ஒரு குரல். அது குரலல்ல ஏறக்குறைய அலறல்.

“யாரது? செல்லாண்டியா?”

ஐயா சட்டென்று எழுந்துவிட்டார்.

“என்னப்பா?”

“நம்ம வயல்ல எவனோ தீ வெச்சுட்டான்யா...”

“என்ன சொல்றே...”

“ஆமாம்யா. எவன்னு தெரியலை. வௌஞ்ச வயல்ல தீயை வெச்சுட்டுப் போயிட்டான். அம்புட்டும் போச்சு. வரப்பு முழுவதும் பெருச்சாளிங்க செத்துக் கருகிக் கிடக்குது.”

வீடு மொத்தமும் பதறியது. நேற்றுத்தான் அறுப்புக்கு நாள் குறித்தது. ஐயா பதற்றம் காட்டவில்லை. நிதானமாக வட்டக் கழுத்து ஜிப்பாவை எடுத்துப் போட்டுக் கொண்டார். யாரிடமும் எதுவும் பேசிக் கொள்ளவில்லை. படியிறங்கிவிட்டார்.

“ஐயா அரிவாளை எடுத்துக்கிடுவோம்.”

“எதுக்கு?”

“சும்மா, ஒரு ஆதரவுக்கு...”

“வேண்டாம் செல்லாண்டி.”

“வெச்சுக்கலாம்யா!”

“அது மரம் வெட்ட வாங்கியது!”

“இருக்கட்டும். ஒரு கையாதரவுக்கு இருக்கட்டும்.”

“சரி. உன் பிரியம்.”

“ஆச்சி, அந்த வீச்சரிவாளை இப்படிக் கொஞ்சம் எடுங்க.” இதைச் சொல்லும் போது அவன் குரல் நடுங்கிற்று. பார்வை தடுமாறித் தத்தளித்தது.

அலர்மேலுதான் பரண் மீது இருந்த அரிவாளை எடுத்தாள். பளபளவென்று ஒளி காட்டியது. செல்லாண்டி அதை வாங்கிக் கோணிப்பையில் சுற்றிக் கொண்டான். ஐயா முன்னே நடக்க பின்னாலேயே தொடர்ந்தான். வடக்குத் தெரு தாண்டி, ராசு செட்டியார் வாழைத் தோட்டத்திற்குள் புகுந்து, முத்துப் பிள்ளை புளியந் தோப்பு வழியாகச் சென்றனர். தோப்பைக் கடந்ததும் வாய்க்கால் வரும்.

வாய்க்காலில் கால்வைத்ததும் ஐயா



**“என் எட்டு வயசுப் பொண்ணு தன்னோட வாழ்க்கை எப்படி எல்லாம் இருக்கணும்னு இப்பவே அருமையா திட்டம் தீட்டி வச்சிருக்கா!”**

**“அப்படியா... பேஷ், பேஷ்! என்ன மாதிரி திட்டம்?”**

**“பதினாறு வயசுவரை கான்வெண்டில் படிப்பு... கூடவே டான்ஸ் கத்துக்கறது.. அப்புறம் சினிமாவில் நடிக்கிறது... முப்பது வயசுக்குமேலே ஒரு அரசியல் கட்சில சேர்ந்து...!”**

**“பலே! இந்த ஐடியாவெல்லாம் அவளுக்கு யார் கொடுத்தா?”**

**“அவ கிளாஸ்ல கூடப் படிக்கிற உயிர்த் தோழியாம்!”**

**— கே. அனிதா**

குனிந்து உள்ளங்கையில் நீரை அள்ளி வாயில் போட்டுச் சுவைப்பார். இது அவர் வழக்கம். செல்லாண்டியும் அந்தத் தருணத்திற்காகத்தான் காத்திருந்தான். வாய்க்கால் மேட்டைத் தொட்டதுமே, செல்லாண்டி, அரிவாளைச் சுற்றியிருந்த கோணிச் சாக்கை உருவி எறிந்து விட்டான். ஐயா வாய்க்காலில் கால் வைத்தும் தடுமாறினார். அவரை பதற்றம் தொற்றிக் கொண்டது. நான்கு எட்டு வைத்ததும், குனிந்து நீரை அள்ளினார். அதுதான் தாமதம். செல்லாண்டி அரிவாளை ஓங்கி ஐயாவின் கழுத்தை நோக்கி இறக்கினான். ஐயா சட்டென்று நிமிர, குறி தவறி, இடது தோளில் இறங்கிவிட்டது. தகதக வென்று கண்ணாடி மாதிரி ஓடிக் கொண்டிருந்த நீர் நொடியில் கலங்கி நிறம் மாறிற்று. ஐயாவின் அலறலில் வயல் வரப்புகளில் இருந்த கூட்டமெல்லாம் கூடிற்று. செல்லாண்டி நான்கு கால் பாய்ச்சலில் வாழைத் தோட்டத்திற்குள் புகுந்து மறைந்து விட்டான். ஐயாவை மதுரைப் பெரியாஸ்பத்திரிக்குத் தூக்கிக் கொண்டு போனார்கள். தலை தப்பியது. ஆனால் இடதுகைதான் சுத்தமாகப் போயவிட்டது. கையை எடுத்து விட்டார்கள். இன்னும் ஆஸ்பத்திரியில்தான் இருக்கிறார்.

செல்லாண்டியைப் போலீஸ் தேடியது. ஊர் முழுக்கச் சல்லடை போட்டது. ஆள் சிக்கவில்லை. அப்போது தெரிந்து விட்டது; இது அவன் சாமர்த்தியமல்ல. யாருடைய சாமர்த்தியத்திற்கோ இரையாகி விட்டான். செல்லாண்டி அரிவாளோடு ஐயா மீது பாய்ந்ததற்கு வேறு அர்த்தம். பக்கத்து ஊரில் போன வாரம் ஒரு கலவரம். ஜாதிக் கலவரம். அதன் எதிரொலிதான் இது. இந்த ஊரிலும் ஒற்றுமையைக் குலைக்க வேண்டும். தாயாய் பிள்ளையாய் இருக்கும் ஜனங்களை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் போட வேண்டும். ஆணி வேர் எங்கே என்று தேடினான். ஆணிவேரில் கைவைத்தால் மொத்த மரத்தையும் சாய்த்து விடலாம் என்ற எண்ணம். செல்லாண்டியைத் தேடிப் பிடித்துக் காரியத்தில் இறங்கியிருக்கிறான். இது ஒருநாள் வேலையல்ல; கொஞ்சம் கொஞ்சமாகச் செல்லாண்டியின் மூளையைத் துவைத்தெடுத்திருக்கிறான். அவன் மனசை சாராயம் ஊற்றிக் கழுவி, அனுப்பியிருக்கிறான். அவன் யார் என்றுதான் தெரியவில்லை.

"மூட்டை தூக்கியாவது பிழைச்சுக்குவேன்னு உங்க பையன் சவடாலா பேசிட்டுப் போனானே... என்ன ஆச்சு?"

"வீட்டுல இருந்த நூறு மூட்டை நெல்லையும் தூக்கிட்டே போயிட்டான்!"

— ஆர். அழகுமுத்து



ஐயா ஒரு போதும் செல்லாண்டி மீது கோபம் காட்டவே இல்லை. அவர், அவர் சுபாவப்படியேதான் இருந்தார். "என்னை வெட்டியது என்னவோ செல்லாண்டியாக இருக்கலாம். அதில் அவன் மூளையும், மனசும் சம்பந்தப்படவில்லை என்பதுதான் எனக்கு ஆறுதல்!" என்றார். ஆனால் ஊர் ஜனங்களுக்கு இதில் திருப்தி இல்லை.

ஐயா ஆஸ்பத்திரியில் இருந்து வந்த மூன்றாவது நாள். மதியம் மூன்று மணி. தெருவே அமைதி. எல்லாம் காடுகரை என்று போய் விட்டார்கள். ஐயா சாய்வு நாற்காலியில் அசந்து தூங்கிக் கொண்டிருந்தார். அம்மா நடை வாசலில் படுத்துக் கிடந்தாள். அலர்மேலு கொல்லைப் புற வாசலைப் பார்த்தவாறு படுத்துக் கிடந்தாள்.

கொல்லைப் பக்கம் சற்று தூரத்தில் ஒரு ஓசை. கதவைப் பிறாண்டுகிற மாதிரி ஓர் ஓசை. அலர்மேலு எழுந்து அடிமேல் அடி வைத்து நகர்ந்தாள். நடு அறையில் நின்று எட்டிப் பார்த்தாள். அது நீள அறை. அந்தக் கோடியில் வாசல்.

அலர்மேலுக்கு கால் நடுங்கிற்று. கதவு தாழிட்டிருந்தது. வளையத்தை இழுத்து விடவும் கதவு படார் என்று திறந்தது. செல்லாண்டி நின்றிருந்தான். அலர்மேலுக்கு தொண்டை அடைத்துக் கொண்டது. கூச்சல் போடலாம். அதற்குக் கூட வாய்வரவில்லை. அம்மா விழித்துக் கொண்டு மல்லாந்தாள். அந்த நிலையிலே அவனைப் பார்த்ததும் 'ப்பே' என்று விழித்தாள். முகத்தில் பீதி.

"ஆச்சி...."

# தூக்கியெறிவதிலும் தொழில் தொடங்கலாம்!

நம் நாட்டில் எப்படி அரிசி முக்கியமான உணவோ அதே போல் மேலை நாட்டினருக்கு முக்கியமான உணவு ரொட்டி. ஆனால் இந்த ரொட்டி ஒரு நாள் சென்று மற்றொரு நாள் வைத்திருந்தால் கெட்டியாக ஆகிவிடும். அதைக் குப்பையில்தான் போட வேண்டும். இது போல் ஏராளமான டன் ரொட்டிகள் தினமும் வீணாக்கப்படுவதை ஒருவர் பார்த்தார். அவருடைய அறிவில் அந்த உணவை உபயோகமான வழியில் செயல்படுத்தலாம் என நினைத்தார். இது போல் தூக்கி எறியப்பட்ட ரொட்டித் துண்டுகளை, அதில் சில பொருட்களைக் கலந்து கோழி, மாடு, மற்றும் சில பிராணிகளுக்கு உணவாகக் கொடுக்கும் சிறிய தொழிலை ஆரம்பித்தார். இன்று பல கோடிக்கணக்கான ரூபாய் அளவில் அவர் ஒரு பெரிய தொழிற்சாலையே ஆரம்பித்து விட்டார்.



நாம் எதைக் காண்கிறோமோ அதிலிருந்து ஏதாவது உபயோகமான ஒன்றைச் செயல்படுத்த வேண்டும் என நினைத்தால், அது கண்டிப்பாக நடைபெறும் என்பதற்கு இவருடைய நிகழ்ச்சி ஒரு உதாரணம்.

— பாரீஸ் பார்த்தசாரதி

"......"

"வேண்டாம். முதலெ இங்கிருந்து போயிடு."

"ஐயாவைப் பார்க்கணும்."

"வேண்டாம். போயிடு."

"பார்த்ததும் போயிடுறேன்."

"இப்ப போறியா என்ன? கூச்சல் போட்டு ஊரைக் கூட்டணுமா?" அலர்மேலுவின் குரல் அலறிற்று.

அதற்குள் அம்மா ஐயாவை எழுப்பி விட்டாள். ஐயா வந்தார். தளர்ந்த நடை. ஒரு கை இல்லாமல் மொழுக்கென்றிருந்தார். ஐயாவைப் பார்த்ததும் சடாரென்று நிலத்தில் விழுந்து, அவருடைய காலைக் கட்டிக் கொண்டான். ஐயா சட்டென்று காலை நகர்த்த முயன்றார். முடியவில்லை. வெகு நேரம் வரை அவன் எழுந்திருக்கவில்லை.

எழுந்ததும் கண்களைத் துடைத்துக் கொண்டான். அவன் முகமே மாறியிருந்தது. உதடு தடித்து வெளுத்திருந்தது. தாடையில் அடிபட்டிருந்தது. கை கால்கள் எல்லாம் சிராய்ப்பு. அடிக்கடி அழுதான். அவன் வாய் வார்த்தையாக ஒன்றும் பேசவில்லை. வெகு நேரம் வரையிலும் ஐயாவின் கால்களைப் பிடித்துக் கொண்டு கிடந்ததே அவனுக்குத் திருப்தி. எல்லாம் பேசிவிட்டாற்போல் ஒரு திருப்தி. ஐயாவின் முகம் பார்ப்பதும், அழுவதுமாகவே அந்தக் கணத்தைக் கழித்தான். ஐயாவும் ஒன்றும் பேசவில்லை. இப்படி ஒரு தருணத்தில் என்ன பேச முடியும்? அவர் கண்களும் முக்கும் மலர்ந்தன. மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக் கொண்டார்.

"சாப்புடுறியா?"

அவன் சட்டென்று ஐயாவின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான். ஒரு கணம்தான் பார்வை. அதற்கு மேல் அவனால் முடியவில்லை. கண்களைத் தொங்கப் போட்டுக் கொண்டான். ஒரு கணம் அமைதி. திடீரென்று விசும்பினான். மண்டியிட்ட நிலையிலே அவன் உடல் குலுங்கியது. ஆவேசம் வந்தாற்போல் உடல் ஆடியது.

"சாப்பிடுறியா?"

பதிலில்லை.

ஐயா அலர்மேலுவைப் பார்த்தார். அவள் அடுப்பறைக்குச் சென்று, சாதம் எடுத்து வந்தாள். கொல்லையில் வாழை இலை ஒன்றைக் கிள்ளி எடுத்தாள். இலை கழுவிச் சாதம் பரிமாறினாள். அவன் சோற்றில் கை வைத்தான். கை நடுங்கியது. பசியோடு சாப்பிட்டான்.

ஐயா அவன் சாப்பிடுவதையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் ஒரு பொலிவு. ஒரு களை. அவருக்கென்றே உள்ள தனிப் பொலிவு. இத்தனை நாட்கள் இதை எங்கே ஒளித்து வைத்திருந்தார். ஐயாவின் பழைய முகத்தைப் பார்த்ததும் அலர்மேலுவுக்கும் சந்தோஷம் தொற்றிக் கொண்டது.

# ம.ம.சாய் குடித்திருக்கிறீர்களா?

நின்றால் கால்வலி, உட்கார்ந்தால் மூட்டுவலி, நடந்தால் குதிகால் வலி என்றெல்லாம் அரற்றிக் கொண்டு, நடக்கவே சிரமப்பட்டுக் கொண்டிருந்தார் குசும் ஆண்ட்டி. திடீரென்று சில நாட்களாக எந்தப் புகார்களுமில்லாமல் அவர் ஓடியாடுவதும், ஓரளவு எடை குறைந்திருப்பதும் ஆச்சர்யத்தைக் கிளப்பியது என்றால், காலை பத்து மணிக்குக் கூட பத்துக் கொட்டாவிகள் விட்டுக் கொண்டிருக்கும் அவர் மகன், ஐந்து மணிக்கே எழுந்து சுறுசுறுப்பாய் 'ஜாகிங்' போவது நம்ப முடியாத அதிசயமாயிருந்தது.



• குசும் ஆண்ட்டி

விசாரித்ததில், ஆரோக்கியத்தைப் பெருக்கி ஆயுளை நீட்டிக்கும் 'அமிர்தம்' ஒன்று அவர்களிடமிருப்பதாகச் சொல்லி அழைத்துச் சென்றார்கள்!

முலுண்டு அம்பேத்கர் ரோடிலுள்ள அவர்கள் இல்லத்தில், துணியால் கட்டப்பட்டிருந்த வாயகன்ற கண்ணாடி பாட்டிலுக்குள், பழுப்பு நிறத் தண்ணீரில் மிதந்து கொண்டு, ஒரு சின்ன ஊத்தப்ப சைஸில் அந்த 'அமிர்தம்' கண் சிமிட்டியது!

"இதுதான் புகழ் பெற்ற மஷ்ரூம் (காளான்) மன்சூரியன் சாய்"- மும்பையில், குறிப்பாக குஜராத்திச் சமூகத்தை ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருக்கும் இந்த 'அமிர்தத்தை'ப் பற்றி, "தோல் வியாதி, 'மரு', ஜீரணமின்மை, தலைவலி, கண் நோய்கள், தூக்கமின்மை, ஒவ்வாமை, மெனோபாஸ் தகராறுகள் போன்றவற்றைக் குணமாக்கும்" என்று அவர்கள் விவரித்தபோது, வாயைப் பிளந்து தலையை ஆட்டினோம். "இது சர்க்கரை வியாதியை நூறு நாட்களில் குணமாக்கும்; ஆஸ்துமா, கபம் முதலியவற்றை இரண்டே வாரங்களில் சரியாக்கும்" என்றெல்லாம் அவர்கள் அடுக்கத் தொடங்கிய போது, தலை சுற்றலே வந்து விட்டது!

"இதோ பாருங்கள்; -'சம்பவா' என்ற குஜராத்தி ஆரோக்கிய இதழில் வெளிவந்த (3.6.97) செய்தி,.... ஜப்பானிய டெலிவிஷன், ரேடியோவிலெல்லாம் சில ஆண்டுகள் முன் அமர்க்களப் பட்டதாம்" என்றவாரே சில குஜராத்தி தினசரிகளை நீட்டினார்கள்.

டாக்டர் பான்பர்ன் என்ற விஞ்ஞானி, இதைப் பருகினால் 4-5 மாதங்களில் முடி வளரும்; நரை மயிர் கருக்கும் என ஆராய்ச்சி செய்து எழுதியிருக்கிறார். டாக்டர் ஸ்கல்னர் என்ற ஜெர்மானியர் இது கான்சர் பரவுவதைத் தடுக்கும் என்கிறார். இதன் 'பவித்ர' வரலாற்றை அவர்கள் நமக்கு மொழி பெயர்க்க, அதன் தமிழ்ப் பதிப்பு, இதோ!

காகேஷியன் மலைச் சாரல்களில் காணப்பட்ட இந்த மஷ்ரூம், ரஷ்யா, திபெத், மெக்ஸிகோ, ஸ்பெயின் போன்ற இடங்களில் பிரபலமாயிருந்தது. பிறகு டூரிஸ்டாக மெக்ஸிகோ சென்ற ஒரு ஜப்பானியப் பெண்மணி வாயிலாக ஜப்பானுக்குச் சென்றது. இந்நாட்டுக்காரர்களின் நீண்ட ஆயுள் ரகசியமே இந்தச் 'சாய்'தானாம்! ஸ்பெயினிலிருந்து கன்னுபாய் அந்தாரியா என்ற குஜராத்தி, இதை பாவ்நகர் எடுத்து வந்திருக்கிறார். இப்படித்தான் குஜராத்தியினரிடையே இது பரபரப்பை ஏற்படுத்தி, இப்போது மும்பைக்கு வந்திருக்கிறது!

இதை எப்படிச் செய்ய வேண்டும்!

ஒரு ஸ்டீல் பாத்திரத்தில் எட்டு கப் நீரைக் கொதிக்க வைத்து, ஒரு கப் சர்க்கரை சேர்க்க வேண்டும். கீழே இறக்கி, இரண்டு ஸ்பூன் தேயிலைத்தூள் சேர்த்து, மரத்தாலான கரண்டியால் நன்றாகக் கலக்கி, பத்து நிமிடங்களுக்கு மூடி வைக்க

வேண்டும். அரைமணி கழித்து, துணியால் வடிகட்டியபின், தேயிலை நீரை இரண்டு மணி நேரத்துக்கு ஆறவைத்து, பின் வாயகன்ற கண்ணாடி பாட்டிலுக்கு மாற்ற வேண்டும். கையிலுள்ள தங்க நகைகளை எல்லாம் கழற்றி விட்டு (இல்லாவிட்டால் கெட்டு விடுமாம்!) மஷ்ரூமை எடுத்து, அதன் சரசரப்பான பகுதி கீழேயும், மெத்தென்ற பகுதி மேலேயுமிருக்கும் வண்ணம் தேயிலை நீரில் விட வேண்டும். முதலில் கீழே போய், பின்னர் மெது மெதுவாக மேலே எழும்பும்! பாட்டிலின் வாயை, பருத்தி அல்லது கதர்த் துணியால் மூடி, ரப்பர் பாண்ட் போட்டுக் கட்டிவிட வேண்டும். மஷ்ரூம் ஜீவிக்க காற்று வேண்டுமாதலால் வேறு மூடியோ பிளாஸ்டிக்கோ உதவாது!



சூரிய வெளிச்சம் நேரடியாகப் படாத, பாதுகாப்பான, உயரமான இடத்தில் வைத்துவிட வேண்டும்; சரியாக ஏழு நாட்கள் கழித்துப் பார்த்தால்... அந்த மஷ்ரூம் குட்டி போட்டிருக்கும்!

மேலே உள்ளது, நாம் வைத்துக் கொள்ள வேண்டிய 'ஒரிஜினல்'; கீழே உள்ளது, பிறருக்கு கொடுக்கக் கூடிய 'டூப்ளிகேட்'.

இந்த இரட்டையர்களை ஜாக்கிரதையாக எடுத்து, ஒரு கண்ணாடிப் பாத்திரத்தி விட்டு, குழாய்த் தண்ணீருக்கடியில் காட்டினால், நிமிட நேரத்தில் தனித்தனியாகிவிடும்.

பாட்டிலிலிருக்கும் தேநீரை அப்படியே எடுத்து, வேறொரு பாட்டிலிலிட்டு, துணியால் வாய்கட்டி, ஃபிரிட்ஜில் வைத்து விடலாம்!

திராட்டை ரசம் போலிருக்கும் இதை, தினம் காலை எழுந்தவுடன், பல்துலக்கு முன், ¼ அல்லது ½ கப் (அதற்குமேல் கூடாது) உறிஞ்சிக் குடிக்க வேண்டுமாம். கருத்தரித்திருக்கும் பெண்கள், குழந்தைக்குப் பாலூட்டும் பெண்கள், இதை அருந்தக் கூடாதாம். (அந்த மூன்று நாட்களுக்கும், பெண்கள் இதை அண்டக் கூடாதாம்).

டூப்ளிகேட் மஷ்ரூமை, பிளாஸ்டிக் பையில் வைத்து, தேவையானோருக்குக் கொடுக்கலாம். போதிய அளவு உபயோகித்த பின், மஷ்ரூமை மண்ணில் புதைத்து, மூடிவிட வேண்டுமாம்!

ஒவ்வொரு செவ்வாயும், குசும் ஆண்ட்டி வீட்டில், குட்டி போடும் மஷ்ரூமை எடுத்துச் செல்ல அட்வான்ஸ் புக்கிங் ஆகிவிடுகிறதாம் உபயோகித்தவர்கள் அனைவருமே ஆரோக்கியத்திற்குக் கட்டியம் கூறுகின்றனர்.

தாணா ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸின் பிரசிடெண்ட்டான 60 வயதைத் தாண்டிய கம்பாட்டே (மராத்தியர்) தாமும் தம் மனைவியும் இதைப் பல ஆண்டுகளாக அருந்தி வருவதாகவும், இத்தனை வருடங்களில் பெரிய நோய் நொடி என்று தாங்கள் அல்லல் பட்டதேயில்லை என்றும் கூறுகிறார்.

வியாபார நோக்குடன் யாரும் இதை அணுகவும் கூடாது; மிகுந்த சிரத்தையுடன் இதனைக் கையாள வேண்டும், - என்பது மட்டுமே மஷ்ரூம் சாயைப் பெறுவதற்கான கண்டிஷன்கள்!

மஷ்ரூமிலுள்ள புரோட்டீன்கள், ஈஸ்ட், என்ஸைம்களுடன் கலந்து, மைக்ரோ ஆர்கானிஸம்களை வளர்க்கும் தன்மையுடையதாம்!

அலோபதி அல்லாத 'ஆல்டர்னேட் மெடிஸன்'கள் பிரபலமாகி வரும் இந்தக் காலத்தில், இந்த மஷ்ரூம் மஞ்சூரியன் சாய், மும்பைவாசிகளுக்கு மற்றுமொரு புதிய அனுபவம்!

— ஜெயஸ்ரீராஜ்

கல்கி

+கல்கி

நீங்கள் கொஞ்சமும் எதிர்பார்க்காத, மூக்கின் மேல் விரல் வைத்து ஆச்சரியப்படப் போகும் இலவச இணைப்புடன்—

அற்புதமான புதுத் தொடருடன்—

அறிவுக்கு வேலை தரும் போட்டியுடன்—

தித்திக்கும் சுவையோடு வெளிவருகிறது, ஏப்ரல் 12 சித்திரைச் சிறப்பிதழ்!

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

# யூலிப்

யூனிட் லிங்க்ட் இன்ஷ்யூரன்ஸ் பிளான்



"நான் ஒரு முதலீட்டு திட்டத்தைத் தேர்ந்தெடுத்து நான்கு நற்பயன்களைப் பெற்றேன்!"

- **கவர்ச்சிகரமான ஆதாயங்கள்**
  கடந்த 5 ஆண்டுகளாக 16.5% டிவிடென்ட்
- **வரி சேமிப்பு**
  வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 88ன் கீழ்
- **ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்**
  ரூ.75,000 வரை
- **விபத்து காப்பீடு**
  ரூ.30,000 வரை

## யூலிப். வெறும் வரி சேமிப்பை விட மேலானது

உங்கள் யுடிஐ முகவரை இன்றே அணுகவும்.

**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

உங்கள் மேலான எதிர்காலத்திற்கு

இடர் அம்சங்கள் : எல்லா மியூச்சுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் இடர்களுக்கு உட்பட்டவையாகும், மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டைப் பாதிக்கும் அம்சங்கள் மற்றும் சக்திகளைப் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும்/இறங்கிடவும் செய்யும். கடந்தகால சாதனை வருங்கால முடிவுகளை சுட்டிக்காட்டுவதாகாது. யூலிப் திட்டத்தின் பெயர் மட்டுமே தவிர, இது எவ்விதத்திலும் திட்டத்தின் தரத்தை, அதன் வருங்கால வளர்ச்சியை அல்லது வருமானத்தை சுட்டிக் காட்டுவதாகாது. திட்டத்தின் குறிக்கோள்கள் நிறைவேற்றப்படும் என்பதற்கு உறுதியளிக்க முடியாது. முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: ● கோயம்புத்தூர் போன்: 214973 ● சென்னை போன்: 517101, 517190
● மதுரை போன்: 38186 ● திருச்சி போன்: 760060

0240/97 M TAM B

